உங்களுக்கான புதிர் வினாக்கள்

# பிரமிக்க வைக்கும் புவனேஸ்வர்



இந்தியாவில் சுமார் 500 ஆலயங்களைக் கொண்டுள்ள புவனேஸ்வர் உங்களை அன்புடன் வரவேற்கிறது.

புவனேஸ்வருக்குச் செல்லுமுன் பிந்து சாகர் ஏரியில் குளித்து விட்டுச் செல்வது புண்ணியமானது எனக் கருதப்படுகிறது. இந்த ஏரி பற்றி ஒரு புராணக்கதை கூறப் படுகிறது. பார்வதி தேவி இப்பகுதியில் காடுகளில் திரிந்து கொண்டிருந்த போது அவருக்கு தாகம் எடுத்ததாம். சிவபெரு மான் இந்த ஏரியை அமைத்து இதில் இந்தி யாவின் எல்லா நதிகளிலிருந்தும் ஏரி களிலிருந்தும் நீர் கொண்டு வரச் செய்து நிரப்பினார்.

இந்நகரிலுள்ள லிங்கராஜ் ஆலயம் மிகப் பெரியது. இது பதினொன்றாம் நூற்றாண் டில் கட்டப்பட்ட சிவாலயம். 46 மீட்டர் உயரக் கோபுரமுள்ள இந்த ஆலயம் ஒரிஸ் ஸாவின் சிற்பக் கட்டடக் கலைக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

முக்தேஸ்வர் ஆலயமும் அழகிய கல் கட்டடக்கலைக்கு உதாரணமாம். இதன் வளைந்த அழகிய நுழைவாசல் அற்புத நுணுக்கச் சிற்பக் கலையை வெளிக் காட்டுகிறது.

லிங்கராஜ் ஆலயத்திலிருந்து தென்-கிழக்கில் சற்றுத் தொலைவிலுள்ள சிசு பால்கட் என்ற கோட்டை கி.மு மூன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாம்.

தொலி இந்நகருக்குத் தெற்கே எட்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு தான் அசோக சக்கரவர்த்தி புத்த மதத்தில் சேர்ந்தாராம். அசோகரின் முதலா வது கல் வெட்டுகளை இங்கு காணலாம்.

தவளகிரி மலையில் அமைதிக்கான தற்காலத்திய சின்னம் முன் காலத்து பயங் கர கலிங்கப் போரை நினைவூட்டுகிறது. நகரிலிருந்து சற்றுத் தள்ளி கண்ட கிரிக் குகைகளும் உதயகிரிக் குகைகளும் ஜைன கலாசாரத்தை வெளிப்படுத்துகின்றன.

---

உங்களுக்கான புதிர் வினாக்கள்
(14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)

1. புவனேஸ்வருக்கு அருகிலுள்ள எந்த ஊர் அழகிய கல்கட்டடக்கலைக்குப் பெயர் போனது?

   ------------------------------------

2. இக்குகைகளில் இந்திய நடனக்கலையின் பழம் பெருமையைக் காட்டும் சிற்பங்கள் பல நூற் றாண்டுகளாக உள்ளன. அக்குகைகள் யாவை?

   ------------------------------------

3. புவனேஸ்வருடன் மேலும் இரு ஆலய நகரங்கள் சேர்ந்து முப்பெரும் ஆலய நகரெனப் பெயர் பெற்றது. அந்நகரங்கள் யாவை?

   ------------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

Orissa Tourism Quiz Contest
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097.**

பெயர் : ..........................................

வயது : ..........................................

முகவரி : ..........................................

..........................................

பின்கோடு.................. போன் ..............

Winners picked by Orissa Tourism in each contest will be eligible for 3-days, 2-night stay at any of the OTDC Panthanivas, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar - 751 014. Ph : (0674) 432177, Fax : (0674) 430887, e-mail : ortour@sancharnet.in. Website : Orissa-tourism.com



இந்தியப் பண்பாடு-வரலாறு

29



இசையும் மலரும்

19



வாய்ச்சொல் வீரன்

46



பிராம்மணனும், தலைவிதித்தேவனும்

38



# பொருளடக்கம்



இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph: 044-234 7384
234 7399
e-mail : advertisements@chandamama.org

**டில்லி**
மோனா பாட்டியா
Ph: 011-651 5111
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022-266 1599/
266 1946/265 3057

## SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ சந்தாமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# கடந்த காலத்துடன் பிணைப்பு

தீக்குச்சியைப் பயன்படுத்தாமல் எப்படி நெருப்பு மூட்டுவது என்பதையும், நாட்டின் வரலாற்றை அருங்காட்சியகங்களுக்குப் போய் அங்குள்ள பொருள்களைக் கண்டு அறிந்து கொள்கிறார்கள் சிறுவர்கள் என்பதையும் ஜப்பானின் கல்வி பற்றிய விவரங்களை அளிக்கும் ஒரு பத்திரிகை கூறுகிறது. ஆம். புத்தகங்களில் இவை பற்றிப் படிப்பதை விட நேரில் சென்று கண்டு அறிந்து கொள்வது சிறந்தது தானே.

இதனால் புத்தகங்களால் ஒரு பயனுமில்லை என்பதல்ல. நாம் அறிவை வளர்க்க மற்ற சாதனங்களும் உள்ளன என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நாம் நம் நீண்ட காலப் பண்பாடுகளை மறந்து கொண்டே வருகிறோம். நம் பாரத நாடு மிகப் பெரிய நாடு. அதில் பல மத, இன, ஜாதி மக்கள் வாழ்கிறார்கள். நாட்டின் தட்பவெட்ப நிலை யும், நிலத்தின் தன்மையும் இடத்திற்கு இடம் மாறி உள்ளது. ஒவ்வொரு மாநிலமும் தனக்குள்ள சிறப்பைக் கூறிப் பெருமைப் பட்டுக் கொள்கிறது. அதனால் தான் ஒவ்வொரு மாநிலமும் கொண் டாடும் சிறப்புப் பண்டிகையையும், நாட்டின் நடனக் கலையிலுள்ள பல நடன வகைகளையும் விவரித்து, நாட்டின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் வகையில் அவற்றைப் பிரசுரிக்கத் தொடங்கியுள்ளோம். எல்லோரும் எல்லா இடங்களுக்கும் போக முடியாது. எனவே, இவை பற்றித் தெரிவிப்பதால் நம் நாட்டின் கடந்த கால வாழ்க்கையுடன் நம் தற்கால வாழ்க்கை எவ்வாறு பிணைக்கப் பட்டுள்ளது என்பது நன்கு விளங்கும்.

இம்மாதம் 5ந் தேதி முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர். எஸ். ராதாகிருஷ்ணனின் பிறந்த நாள் வருகிறது. ''வரலாறு பல நூற்றாண்டு களால் செய்யப்படுகிறது. ஆனால் பண்பாடு பல நூற்றாண்டு வரலாற் றால் அமைவது'' என அவர் கூறியதை நாம் மனதில் கொண்டு, கடந்த கால வாழ்க்கையுடன் தற்கால வாழ்க்கையை நாம் இணைத்து நம் பண்பாட்டைக் காத்து வருவோம்.

ஆசிரியர் : விஸ்வம்







# வாசகர் கடிதங்கள்

மாதம் தோறும் பௌர்ணமி நிலவைக் கண்டு மனம் மகிழ்வது போல ஒவ்வொரு மாதத்திலும் 'அம்புலிமாமா' இதழைப் படித்து மனம் மகிழ்கிறேன்.

*க. முருகையப்பன், ஈரோடு*



நான் எனது பனிரெண்டாவது வயது முதல் 'அம்புலிமாமா' வைப்படித்து வருகிறேன். வண்ணப்படஙகளுடன் நல்ல கதைகளைக் கொடுப்பதில் 'அம்புலிமாமா' விற்கு இணை எதுவுமே இல்லை.

*கற்பகம் மணியன், சென்னை*

குற்றாலத்து அருவி போல மனதைக் குளிர வைத்து ரசிக்கத்தக்க விதமாய் வெளி வரும் 'அம்புலிமாமா' வைப் பாராட்டுகிறேன்

*நெல்லையப்பன், தென்காசி*

'அம்புலிமாமா' என்றதும் என் நினைவிற்கு வருவது வேதாளக்கதைகள் தான். வேதாளம் கேள்வி கேட்க அதற்கு விக்கிரமன் பதிலளிப்பது அறிவுக்கு விருந்தாக இருக்கிறது.

*பழ, சிதம்பரம், ராயவரம்*

'மாயாஜால மலை' விருவிருப்பாகப் போகிறது. சம்பவங்கள் மந்திர தந்திரங்களால் நிகழ்வது கற்பனைக்கு நல்ல ஊட்டம்.

*முகவைநாராயணன், முகவை*

மகாபாரதம் படிக்கப்படிக்க நற்பண்புகளை போதிக்கிறது. புராணக்கதைகளை வெளியிடுவதில் 'அம்புலிமாமா' வுக்கு இணை அம்புலிமாமா தான்.

*சாந்தா கோபாலன், புதுடில்லி*

'நம் இந்தியா' வில் கேட்கப்படும் கேள்விகளும் அதற்கான பதில்களும் பல விஷயங்களைத் தெரிய வைக்கின்றன.

*கனகலஷ்மி, தாராபுரம்.*




8

(கரடியப்பன் சுரங்கப்பாதையின் வாயிலருகே வந்தான். ஜீவதத்தன் இறந்து போன ஓநாய் ஒன்றைத்தூக்கி அவனருகே எறிந்தான். அதைக் கண்ட சில ஓநாய்கள் அங்கு ஓடின. அவற்றின் பின்னாலேயே ஜீவதத்தனும் கஜவர்மனும் சென்றனர். சற்று தூரத்திலிருந்த சமரபாகுவையும், சண்டப்பனையும் ஓநாய்கள் சூழ்ந்தன.)

சமரபாகுவிடம் சண்டப்பன் ''ஐயா! ஓநாய்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டு விட்டனவே. இனி நம் கதி அதோகதி தான்'' என்று நடுநடுங்கிய வாறே கூறினான்.

அப்போது கஜவர்மன் உரத்த குரலில் சமரபாகுவைப் பார்த்து ''சமரபாகு! நான் வந்து கை கொடுக்கிறேன். அதைப் பற்றிக் கொண்டு மேலே இருவரும் வந்து விடுங்கள்'' என்றான்.

அது கேட்டு இருவரும் கஜவர்மன் நீட்டிய கையைப் பற்றினர். கஜவர் மனும் அவர்களைத் தூக்கித் தானி ருந்த இடத்திற்குக் கொண்டு வந்து விட்டான். ஜீவதத்தன் தன் மந்திரத்தடி கொண்டு ஓநாய்களை அடித்து விரட்டினான். அவை கரடியப்பன் இருந்த இடத்தை நோக்கி ஓடின. ஜீவ தத்தன் சுற்றிலும் பார்த்து விட்டு ''கஜா! கரடியப்பனைக் காண வில்லையே. மாயமாய் எங்கு மறைந் தான்? அவனது ஆட்கள் கூடத் தென் படவில்லையே'' என்று கேட்டான்.

கஜவர்மனும் நாற்புறமும் பார்த்த போது எங்கிருந்தோ பல குரல்களைக் கேட்டான். அப்போது சமரபாகு குறுக்கிட்டு ''அந்தக் கரடியப்பன் தன் ஆட்களை எச்சரித்துக் கொண்டி ருப்பது எனக்கு நன்கு கேட்கிறது. நாம் கூட இங்கு நீண்ட நேரம் இருப்பது ஆபத்தே'' என்றான்.



வைத்ததும் சில மனிதர்கள் கூக்குரல் இடுவதும் ஓநாய்கள் ஊளையிடு வதும் தெளிவாக கேட்கப்பட்டன.

அவர்கள் அப்பாதையில் சென்று கரடியப்பனும் அவனது ஆட்களும் வசிக்கும் பகுதியை அடைந்தார்கள். கரடியப்பன் விருகேஸ்வரி தேவியின் ஆலயத்தில் தான் இருப்பான் என ஜீவதத்தன் உறுதியாக நம்பினான். அப்போது கரடி முகமூடி மனிதன் ஒருவன் வேகமாக ஓடி வந்தான். அவனை ஒரு ஓநாய் துரத்திக் கொண்டு வந்து கொண்டிருந்தது. கஜவர்மன் உடனே தன் வாளால் அதனைத் தாக்கவே அது சுருண்டு விழுந்து புரண்டு எழுந்து ஓடி விட்டது.

கஜவர்மன் அவன் முதுகைத் தட்டி "சிந்துப் பகுதியிலிருந்து வந்து நாடு பிடிக்க நினைத்த நீயா இப்படி நடுங்கு கிறாய்?" என்று கேட்டான். அதைக் கேட்ட சமரபாகு ரோஷத்துடன் தன் கையிலிருந்த ஈட்டியை உயரத்தூக்கி "உயிரே போகும் நிலையில் இருக் கும் போது நாடாளும் ஆசை எனக்கு எதற்கு?" என்றான்.

அப்போது ஜீவதத்தன் "சமரபாகு! மனம் ஒடிந்து போய்விடாதே. உன் கையில் ஈட்டி இருக்கிறது. என்னிடம் மந்திரத்தடி உள்ளது. கஜவர்மனின் சக்தி வாய்ந்த வாள் உள்ளது. இவற் றால் நாங்கள் உன்னை எம் நண்ப னான சொர்ணத்திடம் கொண்டுப் போய்விட்டு விடுகிறோம். பயப் படாதே. இப்போது நாம் சுரங்கப் பாதைக்குள் போவோம்" என்றான். அவர்கள் அப்பாதையில் அடி எடுத்து

அப்போது ஜீவதத்தன் கரடி முக மூடிக்காரனைப் பார்த்து "அடே! கரடி யப்பனின் சீடா! உரக்கப் பேசிக் கத்தி னால் உன்னை கொன்று விடுவேன். நான் கேட்கும் கேள்விக்கு பதில் சொல். கரடியப்பன் எங்கே இருக்கி றான்? உன் கூட்டாளிகளெல்லாம் இன்னமும் இங்கே தான் இருக்கிறார் களா அல்லது காட்டிற்குள் ஓடிப் போய் விட்டார்களா?" என்று கேட்டான்.

அவனும் "ஐயா! யாரும் எங்கும் போய்விடவில்லை. ஓநாய்களுக்கு பயப்பட்டு இங்கும் அங்குமாக ஒளிந்து கொண்டிருக்கிறார்கள். கரடி யப்பர் விருகேஸ்வரி தேவியின் ஆல யத்தில் தியானத்தில் மூழ்கி இருக் கிறார்" என்றான். அப்போது கஜவர் மன் "எங்களை பிடித்து அடிமை களாக்கிக் கொள்ள நினைத்த சூரப்புலி களான நீங்களா ஓநாய்களைக் கண்டு



பயப்படுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

அது கேட்டு அவன் ''மனிதர்கள் என்றால் எப்படியாவது சமாளித்து விடலாமே. ஆனால் ஓநாய்களோ கொடூரமானவை'' என்றான். அது கேட்டு ஜீவதத்தன் சிரித்து ''சரி. உன் கரடியப்பன் ஆலயத்தில் இருப்ப தாகக் கூறினாயே. அங்கு போவதற்கு வழியைக் காட்டு'' என்றான்.

அவனும் அவர்களைக் கொஞ்ச தூரம் வரை அழைத்துப் போய் ''இதோ தெரிகிறதே. இது தான் அந்த தேவியின் ஆலயம்'' என்றான்.

கஜவர்மன் முதலில் போய் ஆலயத்தின் கதவைத் தள்ளினான். அது தாளிடப்படாததால் எளிதில் திறந்து கொண்டது. உள்ளே விருகேஸ் வரி தேவியின் விக்கிரகம் இருந்தது. அதன் முன் கரடியப்பன் படுத்துக் கண்ணை மூடிக் கொண்டு தியானத் தில் இருந்தான். கஜவர்மன் ஜீவதத் தனைப் பார்த்துக் கரடியப்பன் தியானம் செய்தவாறே படுத்திருப்ப தாகச் சைகை செய்தான்.

அப்போது ஜீவதத்தன் தன்னருகே வரச் சொன்னான். அவன் வந்ததும் ''கஜா! நீ சத்தம் செய்யாமல் பூனை போல் நடந்து தேவியின் விக்கிரகத் தின் பின்னால் போய் மறைந்து கொள். தேவி கூறுவது போல கரடியப் பனும் அவனது ஆட்களும் இங் கிருந்து காட்டிற்குள் சென்று விட வேண்டுமென்று கூறு'' என்றான். அதற்கு இணங்கி கஜவர்மன் ஆல யத்துள் ஓசைப்படுத்தாமல் சென்று தேவியின் விக்கிரகத்தின் பின்னால் மறைந்து நின்று கொண்டான்.

அங்கிருந்து கஜவர்மன் ''பக்தா கரடியப்பா! உன் பக்திக்கு மெச்சி னேன். சில துரோகிகள் இங்கு வந்



திருப்பதால் இந்த இடத்தின் புனிதத் தன்மை கெட்டுவிட்டது. நான் இங் கிருந்து மறைந்து போய் காட்டின் பெரிய குளக்கரையிலுள்ள நாவல் மரத்தடியே போய் இருக்கப் போகி றேன். நீ என் பக்தர்களை எல்லாம் இங்கிருந்து அழைத்துக் கொண்டு கிளம்பி அங்கே வந்து சேர்'' என்று தேவி கூறுவது போலக் கூறினான்.

அதைக் கேட்ட கரடியப்பன் எழுந்து நின்று ''தேவி விருகேஸ்வரீ!'' என்று ஏதோ கூற முற்படுகையில் கஜ வர்மன் கடுங்குரலில் ''எதுவும் பேசாதே. உடனே குளக்கரைக்குச் செல்'' என்று கட்டளை இட்டான்.

கரடியப்பன் ஆலயத்திலிருந்து வெளியே வருவதைக் கண்ட ஜீவதத்தனும் மற்றவர்களும் மறைந்து நின்றனர். கரடியப்பன் தன் கையிலி ருந்த திரிசூலத்தை உயரத்தூக்கி ஆட்டியவாறே ''அடே விருகேஸ்வரி தேவி பக்தர்களே! எல்லோரும் கிளம்பிக் காட்டிலுள்ள குளக் கரைக்குச் சென்று விடவேண்டு மென்று தேவி கட்டளை இட்டு விட் டாள். அதனால் உடனே கிளம் புங்கள்'' என்று கூவிக் கொண்டே அங்கும் இங்கும் திரிந்தான். சற்று நேரத்தில் அவனது சீடர்கள் யாவரும் ஓரிடத்தில் கூடினார்கள். பிறகு கரடி யப்பன் எல்லோரையும் கூட்டிக் கொண்டு காட்டை நோக்கிச் சென்றான்.

இதற்குள் ஜீவதத்தன் அங்கிருந்த ஓநாய்களை எல்லாம் விரட்டி அடித் தான். அவை காட்டை நோக்கிச் செல்லும் கரடியப்பனையும் அவனது சீடர்களையும் துரத்தலாயின. அவர் களோ ''ஐயோ ஓநாய்கள் வருகின்ற னவே'' என்று கூவி தலைதெறிக்க ஓடி னார்கள். அதைக் கண்ட கஜவர்மன் ''இந்த ஓநாய்களை எதிர்க்க முடியாத கரடியப்பன் இந்தக் கூட்டத்தலை வனாம். மிகவும் வேடிக்கையாக இருக்கிறதே'' என்றான்.

இதற்குள் ஜீவதத்தன் தன் மந்திரத் தடியால் ஓநாய்களை அடித்து வீழ்த்த லானான். அதைக் கண்ட கரடியப்பன் பயத்தை விட்டு நின்று ஓநாய்கள் அடி பட்டு விழுந்து சாவதைப்பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாம் முடிந்த பின் அவன் கரடியப்பனருகே சென்று ''ஆமாம். கரடியப்பனான நீ ஒரு வேலையும் செய்யாமல் ஓநாய்களை வளர்த்தும் விருகேஸ்வரி தேவி யையும் ஆதரித்து வருகிறாயே. இது

ஏன்?'' என்று கேட்டான்.

கரடியப்பனும் மென்று விழுங்கியவாறே ''பல பேர்களை என் வசம் வைத்து மிரட்ட இதைத் தவிர வேறு வழி எதுவும் எனக்குத் தெரியவில்லை'' என்றான். அப்போது கஜவர்மன் ''இனி மேல் என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான். கரடியப்பனும் ''விருகேஸ்வரி தேவியின் கட்டளைப்படி இங்கிருந்து காட்டில் உள்ள குளக்கரைக்கு என் சீடர்களும் அங்கு தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். தேவியின் அனுக்கிரகம் எங்களுக்கு இருக்கும்'' என்றான்.

அப்போது கரடி முகமூடிக்காரர்கள் நான்கு பேர்கள் ஓடி வந்து ''குருவே! ஆபத்து! காட்டின் குளக்கரையில் ஐந்நூறு ஒட்டக வீரர்கள் இருக்கிறார்கள். அவர்களின் தலைவனான சொர்ணம் என்பவன் நம் ஆட்களைத்தாக்கி இருவரைக் கொன்று விட்டான். ஐந்து பேர்கள் படுகாய முற்றுக்கிடக்கிறார்கள். இதைச் சொல்லவே நாங்கள் ஓடி வந்தோம்'' என்றான்.

சொர்ணத்தின் பெயரைக் கேட்டதும் ஜீவதத்தனும் கஜவர்மனும், சமரபாகுவும் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. எங்கோ கோட்டை கட்ட வந்த சொர்ணம் இங்கே எப்படி வந்தான்? அந்தப் பகுதி வீரபுரமன்னன் வீரசேனனின் ஆட்சிக்கு உட்பட்டது. வீரசேனன் ஏற்படுத்திய மிருககாட்சி சாலைக்கு அதன் அதிகாரி சில வீரர்களுடன் அங்கு வந்திருந்தான். அவர்கள் இரண்டு புலிகளையும் சில பறவைகளையும் பிடித்த பின் மதிய உணவை உண்ண ஓரிடத்தில் உட்கார்ந்தார்கள்.



உணவு உண்டபின் ஒரு வீரன் ஏதாவது அதிசயப் பறவை இருக்கிறதா என்று சுற்றிலும் பார்த்தவாறே நடந்தான். அப்போது அவன் ஒரு மரத்தில் கட்டப்பட்டிருந்த நான்கு ஒட்டகங்களைக் கண்டான். அவன் உடனே திரும்பிப் போய்த் தன் அதிகாரியிடம் தான் கண்டதைக் கூறினான். அந்த அதிகாரியும் ''ஒட்டகமா? அது நம் மிருகக் காட்சி சாலையில் இல்லை. அவற்றைப் பிடித்து வா'' என்றான். அந்த வீரனோ ''ஐயா! அவை காட்டில் திரியும் ஒட்டகங்கள் அல்ல. அவற்றிற்கு உரிமையாளர் இருப்பது போலத் தெரிகிறது'' என்றான். அதிகாரியோ ''உரிமையாளர்களா? இந்த நாட்டில் உள்ளவை யாவும் நம் மன்னருக்கே சொந்தம். வேறு



யாருக்கும் இல்லை. அதனால் நம் வீரர்களில் இரண்டு மூன்று பேர்கள் சென்று அந்த ஒட்டகங்களைப் பிடித்து வாருங்கள். யாராவது அவற்றின் உரிமையாளர்கள் தாம் என்று கூறினால் அவர்களிடம் என்னைப்பார்க்க வரச் சொல்லுங்கள்'' என்றான்.

நான்கு வீரர்கள் ஒட்டகங்கள் கட்டப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றார்கள். அங்கு ஒட்டகங்களைத் தவிர ஆட்கள் யாரையும் அவர்கள் காணவில்லை. அவர்கள் ஒட்டகங்களை இழுத்துப் போக முயலவே, அவை உரக்கக் கத்திக் கால்களால் தரையை உதைத்துப் புழுதியைக் கிளப்பின. வேட்டையாட வந்த சொர்ணம் சமரபாகுவின் வீரர்களுடன் நம் ஒட்டகங்களைக் கட்டி விட்டுப் போனதால் இப்படி நடந்தது.

ஒட்டகங்களின் ஓலத்தைக் கேட்ட சொர்ணமும் அவனோடு வந்த வீரர்களும் என்ன விஷயம் என்று பார்க்க விரைந்து வந்தார்கள். அவர்களைக் கண்ட வீரசேனனின் வீரர்கள் வாட்களை உருவவே சமரபாகுவின் வீரர்களும் தம் வாட்களை உருவி அவர்களைத் தாக்கலானார்கள். ''திருட்டுப் பயல்களா! போர் வீரர்கள் போல வேஷம் போட்டுக் கொண்டு எங்கள் ஒட்டகங்களையா திருடுகிறீர்கள்?'' என்று கூவி அவர்கள் மன்னனின் வீரர்களைத் தாக்கினார்கள்.

அவர்களோ ''இது எம்மன்னரின் காடு. இங்கு நுழைந்த ஒட்டகங்களை நாங்கள் பிடித்துப் கொண்டு தான் போவோம்'' என்றார்கள் ஆவேசத்துடன்.

சமரபாகுவின் வீரர்களோ ''மன்னனாவது,! மண்ணாங்கட்டியாவது! மரியாதையாக ஆயுதங்களை கீழே போடுங்கள்'' என்று அதட்டினார்.

அரசாங்க வீரர்கள் அதை ஏற்காமல் போரிடவே அவர்களில் இருவர் மடிந்து போனார்கள். ஒருவன் காயமுற்றான். நான்காவது வீரன் சமரபாகுவின் வீரர்களிடம் சிக்காமல் தப்பி ஓடித் தன் அதிகாரியிடம் நடந்ததைக் கூறினான்.

அதைக் கேட்ட அதிகாரி ''உலகிலேயே சிறந்த போர் வீரர்கள் நம் நாட்டில் தான் இருக்கிறார்கள். அப்படி இருந்துமா யாரிடமோ நம் வீரர்கள் தோற்றார்கள்? வாருங்கள். நாம் போய்ப் பார்க்கலாம்'' என்று

கூறி வாளை உருவிக் கொண்டு கிளம்பினான். அவனோடு அங்கிருந்த மற்ற வீரர்களும் சென்றனர். தப்பி ஓடி வந்த வீரன் அவர்களுக்கு வழி காட்டவே, அவர்கள் சமர பாகுவின் வீரர்கள் இருக்கும் இடத்தை அடைந்தார்கள்.

சொர்ணமும் சமரபாகுவும் மிருகக் காட்சி அதிகாரியின் தலைமையில் வரும் வீரர்களைப் பார்த்தார்கள். அப் போது சொர்ணம் ''இவர்கள் நம்மைக் கிள்ளுக்கீரை என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். வரட்டும். கொடுக்கிற அடியில் இவர்கள் கதறிக் கொண்டு ஓடும்படிச் செய்யலாம்'' என்றான்.

வீரர்களும் ''நம் ஒட்டகங்களைப் பிடித்துக் கொண்டு போய் விடுவார்களா? பார்க்கலாம் அதையும். காட்டிற்குள் ஒரு மிருகம் வந்து விட்டால் அது இவர்களது மன்னனுக்கு சொந்தமாகி விடுமாம். என்ன நியாயம் இது! இந்த அநீதியைப் பாதுகாக்க அரசாங்க வீரர்கள் வேறு வருகிறார்கள். சீச்சீ என்ன ஆட்சி இது'' என்றார்கள்.

அப்போது சொர்ணம் ''இப்போது நம் கவனமெல்லாம் வந்து கொண்டிருக்கும் வீரர்களை அடக்குவதில் தான் இருக்க வேண்டும். தர்மம், அதர்மம் என்றெல்லாம் பேசிக் கொண்டிருக்க வேண்டாம். செயலில் இறங்குவோம்'' என்றான்.

இதற்குள் மிருகக்காட்சி சாலை அதிகாரி தன் வீரர்களிடம் ''பார்த்தீர்களா! ஒட்டகக்காரர்கள் நம்மோடு சண்டை போடத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை அடித்துத் துரத்தி விட்டு நாம் அந்த ஒட்டகங்களைப் பிடித்து ஓட்டிக் கொண்டு போய் விடவேண்டும் தெரிந்ததா?'' என்றான்.

பிறகு அந்த அதிகாரி சொர்ணத்தையும் சமரபாகுவின் வீரர்களையும் பார்த்து ''சூரப்புலிகளே! எங்களிடமா வாலாட்டுகிறீர்கள் ஒட்ட நறுக்கி விடுவோம். ஜாக்கிரதை. வந்து சண்டை போடுங்கள் பார்க்கலாம்'' என்று சவால் விட்டான்.

(தொடரும்)





# தேவி பாகவதக் கதைகள்

நைமிசாரணியத்தில் இருந்த முனிவர்களுக்கு சூதர் வியாசரிட மிருந்து கேட்ட பல புராணங்களைக் கூறினார். ஒரு நாள் சௌனகர் தேவி பாகவதப் புராணத்தைக் கூறும்படி சூதரிடம் வேண்டினார். சூதரும் அதைக் கூறுவதாகக் கூறி ஆதிபரா சக்தியைப் பற்றிக் கூறலானார்.

''தேவி ஆதிபராசக்தி மிகவும் சக்தி வாய்ந்தவள். அவளே கல்வி. உலகமே அவளிடம் அடைக்கலம் அடைந்திருக்கிறது. சிருஷ்டியை அசைய வைப்பவள் அந்த ஆதிபரா சக்தியே. மும்மூர்த்திகளும் அவளின் சைகைப்படி நடக்கிறார்கள். பிரம்மா, விஷ்ணுவின் நாபிஸ்தலத்திலிருந்து அதாவது தொப்புளிலிருந்து பிறந்தார். விஷ்ணு வைத்தாங்குபவன் ஆதி சேஷன். நீரின் ஆதாரத்தில் ஆதி சேஷன் இருக்கிறான். அந்த நீருக்கு ஆதாரம் பராசக்தி. இப்படிப்பட்ட ஆதிபராசக்தியின் கதைதான் தேவி பாகவதம்.''

அப்போது சௌனகர் சூதரிடம் ''ஒரு முறை பிரம்மா என்னிடம் ஒரு சக்கரத்தைக் கொடுத்து ''இதன் இருசு எங்கு உடைகிறதோ அது புனிதமான இடமாக இருக்கும். அங்கு கலி புரு ஷன் வர மாட்டான்'' என்றார்.

அந்தச் சக்கரத்தின் இருசு இந்த இடத்தில் தான் உடைந்தது. அதனால் இதற்கு நைமிகம் என்ற பெயர் ஏற் பட்டது. நாங்கள் இங்கேயே தங்கி விட்டோம். கிருதயுகம் மீண்டும் வரும் வரை இங்கேயே கலியின் பய மில்லாமல் இருப்போம். இங்கு உள்ளவர்கள் எல்லாம் புண்ணியாத் மாக்கள். எனவே எல்லோருக்கும் தேவிபாகவதத்தைக் கூறுங்கள்'' என வேண்டினார்.

சூதரும் மேற்கொண்டு தொடர்ந்தார்:

இப்போது இருபத்தேழு துவாபர யுகங்கள் கழிந்து இருபத்தெட்டாவது துவாபரயுகம் நடக்கிறது. ஒவ்வொரு துவாரயுகத்திலும் ஒரு வியாசர் பிறந் தார். வேதங்களை அலசி புராணங்

1. சூதர், சௌனகர், முனிவர்கள், ஹயக்ரீவ அவதாரம்.

களை அளித்த வியாசர் சத்தியவதியின் புதல்வர். அவர் தாம் உங்கள் குரு. அவர் தம் மகன் சுகருக்கு தேவி பாகவதத்தைக் கூறுகையில் நான் கேட்டேன்.''

அப்போது முனிவர்கள் சூதரிடம் ''சுகர் எப்படி வியாசரின் மகனானார்? அவர் அரணிக் கட்டையிலிருந்து பிறந்ததாகச் சிலர் கூறுகிறார்களே. அது சரியில்லையா?'' என்று கேட்டார்கள்.

சுகரும் கூறலானார்: ''ஒரு முறை வியாசர் சரஸ்வதி நதிக்கரையில் தவம் செய்து கொண்டிருக்கையில் பறவைகள் தம் குஞ்சுகளுக்கு அன்புடன் உணவு ஊட்டிக் கொண்டிருப்பதைக் கண்டார். அப்போது அவர் மனதில் தனக்கும் ஒரு மகன் இருந்தால் வாஞ்சையுடன் அவனை வளர்க்கலாமே என்று அவர் மனதில் பட்டது. அதற்காகத் தவம் செய்து எந்தக் கடவுளிடம் வரம் கேட்கலாம் என்று அவர் யோசித்துக் கொண்டிருக்கையில் நாரத முனிவர் அவர் முன் வந்தார். அவரிடம் வியாசர் தம் எண்ணத்தைக் கூறி எந்தக் கடவுளை நோக்கித் தவம் செய்வது என்று யோசனை கூறச் சொன்னார்.

அதைக் கேட்ட நாரதர் கூறினார்: ''என் தந்தைக்கு இப்படிப்பட்ட பிரச்சினை ஏற்பட்டது. அவர் விஷ்ணுவிடம் சென்று ''நான் உங்களை யாவரிலும் உயர்ந்தவராகக் கருதுகிறேன். ஆனால் உங்களையே விட உயர்ந்தவர் யாராவது இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

விஷ்ணுவும் ''உங்களை சிருஷ்டி



கர்த்தா என்றும் என்னை எல்லோரையும் காப்பவர் என்றும் சிவனை அழிப்பவர் என்றும் பொதுவாகக் கருதப்படுகிறது. அது தவறு. ஆதிபராசக்தி தான் யாவற்றையும் படைக்கிறாள். அது போலக் காத்தலையும், அழித்தலையும் அவளே செய்கிறாள். நாமெல்லாம் அவளது கருவிகளாகத் தான் இயங்குகிறோம். நான் மதுகைடபர்களுடன் ஐயாயிரம் ஆண்டுகள் போர் புரிந்து அவர்களை வென்றது அந்த தேவியின் சக்தியால்தானே. நீங்கள் ஏதோ உங்களுக்குள்ள சக்தியால் நீங்களே இயங்குவதாக நினைத்துக் கொண்டு விட வேண்டாம். நானும் அது போல நினைக்க முடியாது. ஏனெனில் ஒரு முறை என் வில்லின் நாண் அறுந்து அது தலையை அடித்துத் துண்டித்து விடவே எனக்கு ஒரு குதிரையின் தலையைப்



பொருத்த நீங்கள் தானே ஏற்பாடு செய்தீர்கள்? அதனால் எனக்கு ஹயக் கிரீவன் என்ற பெயரும் ஏற்பட்ட தல்லவா? எனவே அந்த ஆதிபராசக்தி தான் யாவரிலும் உயர்ந்தவள்'' என்றார்.

நாரதர் இவ்வாறு கூறி ''எனவே நீங்கள் ஆதிபராசக்தியைக் குறித்துத் தவம் செய்து உங்கள் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளுங்கள்'' என்று வியாசரிடம் கூறினார்.

இவ்வாறு சூதர் கூறி வியாசர் ஆதிபராசக்தியை நோக்கித் தவம் புரிந் தார் எனக் கூறி நிறுத்தவே முனிவர் களும் ''ஹயக்ரீவர் என்று கூறினீர் களே அவரது கதையைக் கூறுங்கள்'' எனவே சூதரும் சொல்லலானார்.

ஹயக்கிரீவ அவதாரம்

முன்னொரு முறை விஷ்ணு பத்தாயிரம் ஆண்டுகள் அசுரர்களுடன் போரிட்டுக் களைத்துப் போய்த் தன் தலைக்கடியில் தன் வில்லை வைத்துக் கொண்டு படுத்திருந்தார். அப்போது தேவர்கள் அவரைக் காண வந்தார்கள். அவர் படுத்து உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டு என்ன செய்வது என்று திகைத்தார்கள். பிரம்மாவிடம் சிவ னும் ''நீங்கள் ஒரு புழுவைச் சிருஷ்டித்து விஷ்ணுவின் வில்லின் நாணில் விட்டு விடுங்கள். அது அந்த நாணைக் கடித்து அறுக்க அப்போது 'டங்' என்ற ஒலி கிளம்பும். அதைக் கேட்டு விழித்துக் கொண்டு விடுவார்'' என் றார். பிரம்மாவும் புழுவைச் சிருஷ் டித்து விஷ்ணுவின் வில்லின் நாணில் போகச் செய்தார். அந்தப் புழு நாணைக் கடிக்கவே நாண் பெருத்த ஒலியுடன் அறுந்து விடவே வில்லின் முனை விஷ்ணுவின் கழுத் தைத்தாக்கி அவரது தலையைத் துண்டித்து விட்டது.

அதைக் கண்ட தேவர்கள் கண்ணீர் வடித்து ''உலகத்தையே காக்கும் உங்க ளுக்கா இந்தக்கதி! மிக்க பலமுள்ள ராட்சஸர்களால் கூட உங்களை ஒன்றும் செய்ய முடியவில்லையே. இப்போது எந்த சக்தி உங்களை இப்படிச் செய்தது?'' என்று கூறி புலம்பினார்கள்.

அப்போது தேவகுரு பிரகஸ்பதி ''இப்படி நீங்கள் அழுது கொண்டே இருப்பதில் எந்தப் பயனும் இல்லை. இனிமேல் என்ன செய்ய வேண்டும் என்று யோசியுங்கள்'' என்று கூறினார். அப்போது தேவேந்திரன் ''நாமெல்லாம் பார்த்துக் கொண்டி ருக்கும் போது தானே விஷ்ணுவின் தலை துண்டிக்கப்பட்டது. நம்மால்

அதைத் தடுக்க முடியவில்லையே. எனவே ஏதோ ஒரு அபூர்வ சக்தி தான் இவ்வாறு செய்திருக்கிறது'' என்றான்.

பிரம்மாவும் ''ஆம். எதற்கும் அந்த ஆதிபராசக்தியின் அனுக்கிரகம் இருக்க வேண்டும். அவளே ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத் தொழில்களையும் செய்பவள். எனவே நாம் எல்லோரும் அந்த தேவியைப் பிரார்த்திப்போம்'' என்றார்.

தேவர்களும் ஆதிபராசக்தியைப் பிரார்த்திக்கவே அவளும் அவர்கள் முன் தோன்றினாள். அவளிடம் தேவர் கள் ''தாயே! விஷ்ணுவுக்கு ஏன் இப்ப டிப்பட்ட நிலை ஏற்பட்டது?'' என்று கேட்டார்கள். தேவியும் அது பற்றிக் கூறலானாள்:

''காரணம் இல்லாமல் எதுவும் நடக்காது. ஒரு முறை விஷ்ணு படுக்கையறையில் லக்ஷ்மி தேவி யைப் பார்த்து சிரித்தார். அது கண்டு அவள் திகைத்து ''இவர் ஏன் சிரித் தார்? என் முகம் விகாரமாகவா இருக் கிறது? என்னை விட அழகானவளை இவர் பார்த்து விட்டாரா?'' என எண்ணிக் கோபம் கொண்டாள். அப்போது அவள் விஷ்ணுவின் தலை துண்டாகிக் கடலில் விழ வேண்டுமென சபித்தாள். அந்த சாபத் தின் பயனாகத் தான் இப்படி நடந்தது. இதற்கு முன் ஹயக்கிரீவன் என்ற ராட்சஸன் என்னைக் குறித்துத் தவம் செய்தான். ஆயிரவருடம் அவன் தவம் செய்த பின் தான் அவன் முன் நான் தோன்றினேன். அவனுக்கு என்ன வரம் வேண்டும் என்று நான்



கேட்கவே அவன் தனக்கு யாராலும் மரணம் ஏற்படக் கூடாது என்று கோரினான். நானோ பூமியில் பிறந்த வன் என்றாவது இறந்து தானாக வேண்டும் என்றிருப்பதால் இதை அளிக்க முடியாது, அதனால் வேறு ஏதாவது வரம் கேள் என்றேன். அப் போது அவன் தான் ஹயக்கிரீவ னாதலால் ஹயக்கிரீவன் கையாலே தான் தனக்கு மரணம் ஏற்பட வேண்டும் என்ற வரத்தைக் கேட்கவே அதை அளித்தேன். இப் போது அவன் உலகத்தையே துன் புறுத்தி வருகிறான். மூவுலகிலும் அவனைக் கொல்லக் கூடியவர் யாருமே இல்லாது போயினர். அதனால் ஒரு குதிரையின் தலையைக் கொண்டு விஷ்ணுவின் உடலில் பொருத்துங் கள். இந்த ஹயக்கிரீவர் ராட்சஸனான ஹயக்கிரீவனைக் கொல்வார்'' என்று கூறி மறைந்தாள் ஆதிபராசக்தி.

தேவர்கள் விசுவகர்மா விடம் ஒரு குதிரைத்தலையைச் செய்து கொண்டு வரும்படி கூறினார்கள். விசுவகர் மாவும் அதனைச் செய்து விஷ்ணுவின் உடலில் பொருத்தினார். இந்த ஹயக் கிரீவர் ராட்சஸ ஹயக்கிரீவனைக் கொன்று உலக மக்களை நிம்மதியாக வாழச் செய்தார்.

மது கைடபர்கள்

ஹயக்கிரீவ அவதாரக்கதையைக் கேட்டபின் முனிவர்கள் சூதரிடம் மது கைடபர்களைப் பற்றிக் கூறும்படி வேண்டவே அவரும் கூறலானார்.

பாற்கடலில் சேஷநாகத்தின் மீது படுத்து உறங்கிக் கொண்டிருந்த மகா விஷ்ணுவின் இருகாதுகளிலிருந்து மதுவும் கைடபனும் பிறந்து பாற் கடலில் விழுந்து நீந்தியவாறே தாம் எப்படி பிறந்தோம் என்று யோசித் தார்கள். அப்போது கைடபன் மது விடம் ''நமக்கும் கடலுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது'' என்றான்.

அப்போது ஆகாயத்திலிருந்து யாரோ ஒருவர்கூறிய ஒரு சொல் அவர் கள் காதில் விழவே அதை அவர்கள் ஜெபிக்கலானார்கள். திடீரென ஒரு மின்னல் வெட்டவே அந்த இரு ராட்ச ஸர்களும் அதைக் கண்டு அது ஆதி பராசக்தி என எண்ணி தேவியைக் குறித்துத் தவம் செய்தார்கள். அவர் களது தவம் ஆயிரம் ஆண்டுகள் நடந்து முடியவே தேவியும் அவர்கள் முன் தோன்றினாள். அவர்கள் தமக்குத் தாம் விரும்பும் போது மரணம் ஏற்பட வேண்டுமென்ற வரத்தைப் கோரவே, தேவியும் அதனைக் கொடுத்து விட்டு மறைந்தாள்.

அதன் பின் அவர்கள் கடலில் சஞ் சரித்தவாறே பிரம்மாவைத் தம்முடன் போர் புரிய அழைத்தனர். பிரம்மா பயந்து யோக நிஷ்டையில் அமர்ந் துள்ள விஷ்ணுவைக் கண்டு ''இரு ராட்சஸர்கள் என்னைக் கொல்ல வரு கிறார்கள். என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று வேண்டினார். விஷ்ணுவோ யோக நிஷ்டையி லிருந்து எழாததால் அவர் ஆதிபரா சக்தியைப் பிரார்த்தித்தார்.

தேவி விஷ்ணுவை நிஷ்டை கலைந்து எழுந்து வரும்படிச் செய்தாள். அது கண்டு பிரம்மா மகிழ்ந்து போனார்

(தொடரும்)



வேதாளம் சொல்லும் கதை

# இசையும் மலரும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதன் உள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர நள்ளிரவில் நீ ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? உன்னைச் சக்கரவர்த்தி ஏதோ ஒரு வேலையைச் செய்யும்படி நிர்பந்திக்கிறாரா? அவருக்கு கீழ் படிந்து நடக்கிறாயா? இது உன் எதிர்காலத்தையே கூட பாதிக்கலாம். இப்படி நிர்பந்தப்பட்ட இசைஞானி ஈசுவர சர்மனின்



கதையைச் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

இருகூரில் கணபதி என்றும் ரகுபதி என்றும் இரு பணக்காரர்கள் இருந் தனர். இவர்கள் எல்லா விதத்திலும் சம நிலையில் இருந்த போதிலும் கணபதிக்கு மேலும் மேலும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையே இருந்தது. ஆனால் ரகு பதியோ கலைகளை ரசிப்பவன். கலைஞர்களை ஆதரிப்பவன். அவன் அவ்வூருக்கு வரும் எந்த ஒரு கலைஞனையும் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் உபசரித்து கௌரவித்து மரியாதை செய்து அனுப்புவான்.

கணபதியோ யாராவது கலைஞன் தன் வீடு தேடி வந்தால் தனக்குத் தோன்றிய தொகையைக் கொடுத்து அனுப்பி விடுவான்.

ஈசுவரசர்மா என்ற மாபெரும் இசைஞானிக்கு திடீரென இரு கூருக்குச் செல்ல வேண்டும் என்று தோன்றியது. இதற்குக் காரணம் அவரது முன்னோர்கள் அந்த ஊரில் நீண்ட காலம் வசித்தவர்கள். பிற் காலத்தில் அவர்களது குடும்பம் வேறு ஊருக்குச் சென்று விட்டது.

ஈசுவர சர்மா நாடெங்கிலும் புகழ் பெற்றவர். அந்நாட்டு மன்னர் அவரது இசையைக் கேட்டு மகிழ்ந்து இசைச் சக்கரவர்த்தி என்ற பட்டத்தையும் அளித்து ஏராளமான பணத்தையும் பரிசாக அளித்தார். பல ஜமீன்தாரர் களும் சிற்றரசர்களும் அவரது இசையைக் கேட்டு மகிழ்ந்து பெருந் தொகைகளைப் பரிசாக அளித்தனர். இப்படியாக அவரிடம் ஏராளமாகப் பணம் சேர்ந்து விடவே அவர் மிகவும் ஆடம்பரமாக வாழலானார்.

அவர் தான் குளிப்பதற்காக ஒரு குளத்தை அமைத்துக் கொண்டார். தினமும் விதவிதமான உணவுகளைத் தயாரித்துத் தமக்கு பரிமாற நான்கு சமையல்காரர்களை அமர்த்திக் கொண்டார். தனக்கு மகிழ்ச்சியளிக்க நாட்டிய மாதுகளையும் வேலைக்கு அமர்த்திக் கொண்டார், சில்லெனக் காற்று வீசித்தன் அறையையே குளிர்ச்சியாக வைத்திருக்க அவர் புது சாதனத்தையே தயாரிக்கச் செய்து அதைத் தம் அறையில் பொருத்திக் கொண்டார்.

அவரைக் கச்சேரி செய்ய எந்த

ஊர்க்காரர் அழைத்தாலும் தனக்குக் குளிக்க தனிக்குளம், சமையலுக்கு ஆட்கள், நடனமாடிக் களிப்பிக்க நடன மாதுகள், தான் தங்குமிடம் மிகக் குளிர்ச்சியாக இருத்தல் என எல்லாம் சரியாக இருக்க வேண்டு மென்று நிபந்தனை விதிப்பார். அவற்றை எல்லாம் ரசிகர்கள் ஏற்று அவரைத் தம் ஊர்களில் கச்சேரிகள் செய்ய அழைத்துக் கொண்டு தான் இருந்தனர்.

அவர் செல்ல விரும்பிய இருகூர் சிறிய கிராமம். அங்கு தனக்கு வேண் டிய வசதிகளைச் செய்து கொடுக்க யாராவது இருந்தால் அந்த ஊருக்குத் தானே சென்று கச்சேரி செய்து விட்டு வரலாமென எண்ணினார். அதனால் அவ்வூரின் நிலையைக் கண்டறிந்து வர நாராயணன் என்ற சீடனை அனுப்பினார். நாராயணனும் இரு கூருக்குப் போய் அங்கு கணபதி யையும், ரகுபதியையும் பற்றித் தெரிந்து கொண்டான்.

அவன் முதலில் கணபதியின் வீட்டிற்குப் போய் அவனிடம் ''இந்த ஊருக்கு இசைஞானி ஈசுவர சர்மா வந்து கச்சேரி செய்ய விரும்புகிறார். தங்களால் அவர் விரும்பும் வசதி களைச் செய்து கொடுத்து அவருடன் அளவளாவிக் கொண்டிருக்க முடி யுமா?'' எனக் கேட்டு சர்மா எதிர் பார்க்கும் வசதிகளைக் கூறினான்.

கணபதியும் ''அவர் இந்த ஊருக்கு வந்து கச்சேரி செய்கிறார் எனக் கேட்டு மகிழ்கிறேன். அவருக்கு அவர் விரும்பும் வசதிகளைச் செய்து



கொடுக்கிறேன். ஆனால் அவருடன் இசை பற்றி யெல்லாம் நான் பேசிக் கொண்டிருக்க முடியாது. அப்படிப் பேச ஆசைப்படு பவர் ரகுபதி. வேண்டுமானால் அவரைப் பார்த்துப் பேசுங்கள்'' எனக் கூறி நாராயணனை அனுப்பிவிட்டார்.

நாராயணன் ரகுபதியைக் கண்டு இசைஞானி ஈசுவர சர்மா அவ்வூரில் கச்சேரி செய்ய விரும்புவதாகக் கூறவே ரகுபதியும் ''நான் அவர் விரும் பும் வசதிகளை எல்லாம் செய்து கொடுக்கிறேன். அவரோடு இருந்து பேசிக் கொண்டிருப்பது என் மா பெரும் பாக்கியமே. அவர் எப்போது வேண்டுமானாலும் வரலாம். எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு தயாராக இருக்கும். அவர் வரும் நாளை



எனக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறி நாராயணனை அனுப்பினார்.

நாராயணன் ஊர் திரும்பி சர்மா விடம் ரகுபதி கூறியதைச் சொல் லவே, சர்மாவும் மகிழ்ந்து தான் இன் னமும் ஒரு வாரத்திற்குள் இரு கூருக்கு வருவதாக ரகுபதிக்குத் தகவல் அனுப்பினார். அதன்பின் அவர் இரு கூருக்குச் செல்லப் பயண ஏற்பாடு களைச் செய்து கொண்டிருந்த போது மன்னர் அழைத்து வரச் சொன்னதாக ஒரு அதிகாரி வந்து தெரிவித்தார். மன் னரின் தாயாருக்கு ஏதோ வியாதியாம். அவள் இரண்டு நாட்கள் நினை விழந்து கிடந்ததாளாம். மூன்றாவது நாள் நினைவு வந்ததும் அவள் சர்மா வின் பாட்டைக் கேட்க வேண்டு மென்று விருப்பம் தெரிவித்தாளாம். எனவே அரச கட்டளைப்படி அவர் அரண்மனைக்குப் போக வேண்டியதுதாயிற்று.

சர்மா இருகூருக்கு வருவதைத் தள்ளிப் போட்டிருப்பதாக ரகு பதிக்குத் தகவல் அனுப்பிவிட்டு அரண்மனைக்குச் சென்றார். இரு கூரில் எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்த ரகுபதிக்கு இது சற்று ஏமாற்றத்தை அளித்தது. ஆயினும் நிலைமையைப் புரிந்து கொண்டு சர்மா எப்போது வருவார் என்று எதிர்ப்பார்க்கலானார்.

சர்மா அந்தப்புரத்திற்குச் சென்று மன்னனின் தாயார் முன் அமர்ந்து பாடவே அவளது நோய் போயே போய் விட்டது. இப்படியே ஒரு வாரம் கழிந்தது. அப்போது அரசாங்க வைத்தியர் ''மன்னரின் தாயார் பூரண குணமடைய நான் வளர்க்கும் செடி யின் மலர்களுக்கு உங்கள் பாட்டின் சக்தி கிடைக்கும். மன்னரிடம் அதைத் தெரிவித்து தாங்கள் இங்கு தங்க அனுமதி வாங்கி விட்டேன். ஆறு மாதகாலம் தாங்கள் என் தோட்டத்தில் இருந்து பாட வேண்டி இருக்கும்'' என்றார்.

அரசாங்க வைத்தியன் கூறியது மன்னனின் கட்டளையே என்று உணர்ந்த சர்மா வைத்தியரின் பூந் தோட்டத்தில் ஆறு மாத காலம் இருக்க வேண்டியதாயிற்று.

இதை ரகுபதிக்குத் தெரிவிக்க அவர் நாராயணனை அனுப்பினார். நாராயணன் கூறியதைக் கேட்ட ரகு பதி ''பரவாயில்லை. ஆறு மாதங் களுக்கு சமையல்காரர்களுக்கும்

நடன மாதுக்களுக்கும் சம்பளம் கொடுத்து இங்கேயே இருக்கச் செய்கிறேன். அவருடைய வேலை முடிந்ததும் இங்கே வரட்டும்'' என்று கூறி அனுப்பினார்.

நாராயணன் ஊர் போய் சர்மா விடம் ரகுபதி கூறியதைச் சொன்ன தும் ''ஆகா! என்னால் அவருக்குத் தான் எவ்வளவு செலவு! ஆறு மாதங்க ளானதும் இருகூர் போய்க் கச்சேரி செய்கிறேன்'' என்றார்.

ஆனால் ஆறு மாதங்கள் முடிந்த பின் அவரால் இருகூருக்குப் போக முடியவில்லை. ஏனெனில், அண்டை நாட்டு மன்னனுக்கு ராஜ வைத்தியனுக்கு மலர்கள் ஈசுவர சர்மாவால் கிடைத்ததும் அவற்றில் மருந்தின் சக்தி ஏற்பட்டதும் தெரிய வந்தது. அதனால் அண்டை நாட்டு மன்னன் அந்நாட்டு மன்னனிடம் ஈசுவர சர்மாவைத் தன் நாட்டிற்கு அனுப்பி வைக்கும்படி வேண்டினான்.

மன்னனும் அண்டை நாட்டு மன்னனை விரோதித்துக் கொள்ளக் கூடாது என்ற காரணத்திற்காக ஈசுவர சர்மாவை அண்டை நாட்டிற்கு அனுப்பினான். இத்தகவலை ரகுபதி யிடம் கூற நாராயணனை அவர் அனுப்பினார். நாராயணன் சொன்ன தைக் கேட்ட ரகுபதி ''சரி. இப்போது பணியாட்களுக்கெல்லாம் இரண்டு மாத சம்பளம் கொடுத்து அனுப்பி விடுகிறேன். இசைஞானி வரும் போது அவர்களை அழைத்துக் கொள்கிறேன்'' என்றார்.

நாராயணன் ஊருக்குப் போய் சர்மாவிடம் ரகுபதி கூறியதைச் சொன்னதும் சர்மாவும் ''ஆகா என்ன தாராள மனது! எவ்வளவு உயரிய பண்பு!!'' எனக் கூறி வியந்தார்.

அண்டை நாட்டு மன்னனின் பூந்தோட்டத்து மலர்கள் ஈசுவர சர்மா தினமும் பாடியதால் மருந்து சக்தி யைப் பெற்று விட்டன. அம் மன் னனும் மகிழ்ந்து ''இசைஞானி யாரே! நீங்கள் என் நாட்டிலேயே இருந்து விடுங்கள். உங்களுக்கு எல்லா வசதி களையும் செய்து கொடுக்கிறேன். பல கிராமங்களையும் மானியமாக அளிக் கிறேன்'' என்றான்.

ஆனால் ஈசுவர சர்மாவோ அதை ஏற்காமல் தன் சீடனிடம் ''நாராயணா! நீ இருகூருக்குப் போய் கணபதியைக் கண்டு நான் இன்றைக்கு ஐந்தாவது நாள் இருகூருக்கு வந்து அவரது



வீட்டில் தங்கி அவ்வூரில் கச்சேரி செய்யப் போவதாகத் தெரிவி'' என்றார்.

நாராயணன் கிளம்பிச் சென்ற சற்று நேரத்திற்குப் பின் ஈசுவர சர்மாவும் தம் நாட்டிற்குப் புறப்பட்டு விட்டார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''இசைஞானி இருகூர் செல்ல நினைத்த போதெல்லாம் ஏதாவ்து நிகழ்ந்து அவரை அங்கு போக விடாமல் செய்தது. ஒவ்வொரு முறையிலும் அவர் தம் சீடன் நாராயணன் வாயிலாக தனது வருகை தள்ளிப் போடப்பட்டதைத் தெரிவித்தார். அப்படியும் ரகுபதி மனம் தளராமல் தான் செய்த ஏற்பாடுகளை அப்படியே வைத்துக் கொண்டு அதற்கான செலவையும் செய்து கொண்டிருந்தாரே. முடிவில் அவர் இருகூர் செல்ல முடிந்ததும் ஏன் ரகுபதியின் வீட்டிற்குப் போகாமல் கணபதியின் வீட்டிற்குச் செல்லத் தீர்மானித்தார்? இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''எல்லா வசதிகளை கொண்ட இசைஞானி திறந்த வெளித் தோட்டத்தில் அரச கட்டளையால் பாடியதால் அவரது மனம் மாறி எளிய வாழ்க்கையில் நாட்டம் கொண்டது. ரகுபதியிடம் தான் வருவதாகக் கூறினால் குளிக்கக் குளம், சமையல்காரர்கள், நடனமாதர்கள் என்றெல்லாம் ஏற்பாடு செய்து விடுவார். கணபதி அவ்வாறு தடபுடலாகச் செலவு செய்யாமல் முடிந்த அளவிற்கு வசதிகள் செய்வார். தன் காரணமாக ரகுபதி இரு முறைகளில் எல்லா ஏற்பாடுகளையும் செய்து ஏராளமான பணத்தைச் செலவு செய்து விட்டார். அதனால் அவர் வீட்டில் தங்கினால் மேலும் அவருக்குத் தான் செலவு அதிகரிக்கும். அவர் நஷ்டப்படக் கூடாது என எண்ணியே கணபதியின் வீட்டிற்குப் போக முடிவு செய்தார்.'' என்று பதில் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



இந்தியப் பண்டிகைகள்

# மகிழ்ச்சி தரும் மன்னர் வருகை

கடவுள் நாட்டிலேயே ஒரு பண்டிகையா? கேரளத்து ஓணம் பண்டிகைதான் அது. ஓணம் என்றதும் வீடுகளின் வண்ணக் கோலங்களையும் தென்னந்தோப்புகளிடையே பாயும் ஆறுகள், நீர் நிலயங்களில் நடக்கும் பாம்பு வடிவப் படகுப் போட்டிகளையும் நினைவுப் படுத்தும்.

ஓணம் ஓராயிரம் ஆண்டுகளாகக் கேரளாவில் கொண்டாடப்பட்டு வரும் ஒரு முக்கியமான பண்டிகை. கி.பி 861 தேதியிட்டுக் கிடைத்த தாமிரத்தட்டில் ஓணம் பண்டிகை பற்றிப் பொறிக்கப் பட்டுள்ளது.

பருவ மழைக் காலம் முடிந்ததும் எங்கும் பசுமையும் ஈரமும் நிறைந்திருக்க கேரளாவின் முக்கிய இரு பண்டிகைகளில் ஒன்றான ஓணம் கொண்டாடப்படுகிறது. மற்ற முக்கிய பண்டிகை விஷு எனப் படுவது. இது அறுவடை முடிந்து களஞ்சியங்களில் தானியம் சேரும் ஏப்ரல் மாதத்தில் கொண்டாடப் படுகிறது.

ஓணம் சிங்க மாதத்தில் (ஆகஸ்ட் செப்டம்பர்) கொண்டாடப்படுகிறது. இது கேரளாவில் ஆண்டின் முதலாவது மாதமாகும். இது அவிட்ட நட்சத்திரத்தன்று வரும். தமிழ் ஆவணி மாதத்தில் இது வருகிறது. இன ஜாதி வேறுபாடுகளில்லாமல் கேரளாவில் இப்பண்டிகை எல்லோராலும் கொண்டாடப்படுகிறது. பொதுவாக ஒரு வார காலத்திற்குக் கொண்டாடப் பட்டாலும் ஒரு சில சாதியினர் பத்து நாட்களுக்குக் கொண்டாடுகிறார்கள்.



## மகாபலி தம் நாட்டிற்கு வருகிறார்

வெகு காலத்திற்கு முன் மகாபலி என்ற அசுர மன்னர் கேரள நாட்டை ஆண்டு வந்தார். அறிஞ ரான அவர் நேர்மை தவ றாத திறமை மிக்கவர். மக்கள் அவரது ஆட்சியில் சுக வாழ்வு பெற்றதால் அவரைப் பெரிதும் விரும் பினார்கள். மகாபலி, சக்தி வாய்ந்த மன்னராதலால் பூவுலகம், சொர்க்கலோ கம், பாதாளம் என மூவுல கங்களையும் ஆண்டு வந் தார். அவர் அடைந்து வரும் புகழைக் கண்டு தேவர்கள் பொறாமை கொண்டார்கள்.



சொர்க்க லோகத்தை அவர் வென்று ஆண்டு வந்ததால் தேவர்களுக்கு ஆத்திரம் வந்தது. கோபம் கொண்ட அவர்கள் மகாவிஷ்ணு விடம் சென்று மகாபலியை அடக்க அவரது உதவியை வேண்டினார்கள்.

விஷ்ணுவும் அதற்கான சமயத்தை எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார். மகாபலி அசுவமேதயாகம் செய்ய ஏற்பாடுகளைச் செய்துக் கொண்டிருந்தார். மகா விஷ்ணு குள்ள பிராம்மணச் சிறுவன் வடிவில் மகாபலி யாகம் செய்யும் இடத்திற்குச் சென்றார். யாகத்தின் போது பிராம்மணர்கள் மன்ன னிடம் எதைக் கேட்டாலும் அது அந்த பிராம்மண னுக்குக் கொடுத் தேயாக வேண்டுமென்பது மன்னர் களுக்குக் விதிக்கப்பட்ட விதி. தன் னிடம் வந்த பிராம்மணச் சிறுவனிடம் மகாபலி அவன் விரும்பிக் கேட்பது என்ன என்று வினவினார். தன் காலால் அளக்கும் மூன்றடி இடம் கொடுத்தால் போதும் என்றான். மன்னர் மகாபலி அவன் விரும்பியதைக் கொடுப்பதாக வாக்கு அளித்து விட்டார்.

இது மகாபலியின் குருவான சுக்கிராச்சாரி யாருக்குப் பிடிக்கவில்லை. ஆனால் மகாபலிக்கோ அந்த அந்தணச் சிறுவன் கேட்டதில் தவறு எதுவும் இருந்ததாகத் தோன்ற வில்லை. அப்போது தான் அந்த விந்தையான நிகழ்ச்சி நிகழ்ந்தது.



குள்ளமாக இருந்த அந் தணச் சிறுவன் வாமனன் மிகமிக உயரமானார். அவர் தன் காலின் ஒரு அடியால் பூவுலகு முழுவதையும் அளந்தார். மற்றொரு அடியால் சொர்க்க லோகத்தை அளந்தார். மூன்றாவது அடிக்கு இடம் எங்கே என்று அவர் மகாபலியிடம் கேட்கவே, மகாபலியும் தன் வாக்கைக் காக்க அவரை வணங்கி தன் தலையைக் காட்டி ''இது தான் அது'' என்றார். வாமனர் தன் காலை மகாபலியின் தலை மீது வைத்து அழுத்தி அவரைப் பாதாள லோகத்தில் தள்ளினார். அப்போது மகாபலி வாமன ரான விஷ்ணுவிடம் தான் வருடத் திற்கு ஒரு முறை தன் நாட்டிற்கு வந்து தன் மக்களைக் காண வரம் அளிக்க வேண் டும் எனக்கோரவே, விஷ்ணுவும் அவ்வரத்தை அளித்து விட்டு மறைந் தார். இவ்வாறு மகாபலி ஆண்டு தோறும் தம் நாட்டிற்கு வருவதைத் தான் கேரள மக்கள் ஓணம் என்ற பண் டிகையாகக் கொண்டாடு கிறார்கள்.

மகாபலி ஓணம் பண் டிகை கொண்டாடப்படும் பத்து நாட்களில் ஏதாவது ஒரு நாள் தம் வீட்டிற்கு வந்து போகிறார் என்று கேரள மக்கள் நம்புகிறார் கள். அதனால் அவர் வரு முன் வீடுகளை சுத்தமாக வைத்து கோலங்களைப் போட்டு அவரை வரவேற் கிறார்கள். ஓணத்தன்று அதிகாலையில் சிறுவர்களும் பெண்களும் எழுந்து

இப்பண்டிகையின் போது மகா பலியோடு அவரை தண்டித்த வாமனரையும் மக்கள் வழி படுகிறார்கள். சதுரவடிவ மண் சட்டிகளை வைத்து மலர்களால் அழகுபடுத்துகிறார்கள். இது மகா பலியையும் வாமனரையும் வணங்கும் முறையாம். இந்த மாதிரி வழிபாடு ஆரம்ப காலத்தில் இருக்கவில்லை.





வண்ண மலர்களைக் கொய்து வந்து வீடு களை அலங்கரிக்கிறார்கள். இதற்குப் பூக்கோலம் என்று பெயர்.

ஓணத்தின் போது யாவரும் புத் தாடைகள் அணிந்து பிறருக்குப் பரிசுகள் அளித்து மகாபலியைப் புகழ்ந்து பாடுகிறார்கள். பண்டிகை யின் பத்து நாட்களிலும் சுவையான உணவைத் தயாரிக்கிறார்கள். பெண்கள் 'கைக் கொட்டுக்களி' என்ற நடனம் புரிகிறார்கள். இது பழங்கால நடனமாம்.

கேரள நீர் நிலையங்களில் நடக்கும் படகுப் போட்டிகள் வியக்க வைப்பவை. நீளமான மரப் படகுகள் பாம்பு வடிவில் அமைக் கப்பட்டு பாம்பு படம் எடுப்பது போல உள்ளன. அநேகமாக இப் போட்டிகள் கடலின் காயல் நீர் பகுதிகளில் நடை பெறுகின்றன. இப்படகுகளில் ஏராளமாய் மனிதர்கள் ஏறித்துடுப்பு வலிக்கி றார்கள். இவை போக சிறு படகுகளில் சிறுவர்களும் பெண்களும் உற்சாகத் துடன் செல்கிறார்கள். ஓணத்தின் போது கேரளாவில் எங்கும் குதூகலமும் கேளிக்கையுமே தென்படும்.

## இணைத்துப் பாருங்கள்

ஓணம் பற்றி இருவரிசைகளில் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. முதல் வரிசையுள்ள சொற்களை இரண்டாவது வரிசையிலுள்ள சரியான சொற்களுடன் இணையுங்கள்.

| | |
|---|---|
| 1. கைக்கொட்டிக்களி | அ) ஓணத்தின் போது புத்தாடை அணிவது |
| 2. ஓணக்கொடி | ஆ) படகுப்போட்டி |
| 3. பூக்கோலம் | இ) ஓண விருந்து நாள் |
| 4. வல்லம்களி | ஈ) கிராமிய நடனம் |
| 5. ஓணசத்யா | உ) மலர்களால் தரையில் கோலம் போடுவது. |

விடைகள்: 1-ஈ 2-அ 3-உ 4-ஆ 5-இ

ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

# 20. இடது கண் அழுதது



சேகர் ஓடி வந்து சோமநாதரிடம் ''தாத்தா! நம் ஊர் ஆற்றங்கரையில் உலக அமைதிக்காக யாகம் நடத்தப் போகிறார்களாம். அதில் பிரமுகர்கள் எல்லாம் கலந்து கொள்வார்களாம். நீங்களும் அங்கே போகப் போகிறீர் களா?'' என்று கேட்டான்.

சோமநாதர் அது கேட்டு முகத்தைச் சுளிக்கவே, சேகர் ''ஏன் தாத்தா! உங்களுக்கு இதெல்லாம் பிடிக்க வில்லையா?'' என்று கேட் டான்.

அவரும் ''ஒரு வகையில் பிடிக்க வில்லை தான். இந்த யாகங்களைச் செய்பவர்களும் அதில் கலந்து கொள் பவர்களும் அந்தரங்க சுத்தியுடன் இவற்றைச் செய்தால் இவற்றிற்கு பலன் கிட்டும். ஆனால் அவ்வாறு செய்கிறார்களா என்பது சந்தேகமே. ஆடம்பரமாய் விளம்பரம் பெறச் செய்கிறார்களோ என்று கூட நினைக்க வைக்கிறது'' என்றார்.

அப்போது சேகர் ''அப்படியா னால் முன் காலத்தில் செய்யப்பட்ட யாகங்கள் கூட இந்த நோக்கில் தான் செய்யப்பட்டனவா?'' என்று கேட் டான். சோமநாதரும் ''முன் காலத்தில் யாகங்கள் முனிவர்களாலும் ரிஷிக ளாலும் மன்னர்களாலும் அந்தரங்க சுத்தியுடன் செய்யப்பட்டன. ஒரு நம் பிக்கையுடன் அவர்கள் அவற்றைச் செய்ததால் அந்த நம்பிக்கை பயன் பெற்றது'' என்றார்.

பாரதீயன்



அப்போது சேகரின் தாயாரும் ''முன் காலயாகங்கள் விரும்பிய பலன்களை அளித்ததாகத் தானே நாம் படித்தும் கேட்டும் தெரிந்து கொண்டிருக்கிறோம். அவற்றை வெறும் சடங்குகள் என்று ஒதுக்கி விட முடியும்?'' என்று கேட்டாள்.

சோமநாதரும் ''மகளே! ஆரம்பத்தில் செய்யப்பட்ட யாகங்கள் போல அடுத்தடுத்து செய்யப்பட்ட யாகங்கள் இருக்கவில்லை. அவை கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கொண்டே வந்தன. ஆரம்பகால யாகங்கள் தெய்வத்தோடு சம்பந்தப்பட்டு இருந்தன. யாகம் புரிந்தவர்கள் தான் என்ற அகந்தையைத் தியாகம் செய்த மகான்கள். பற்றற்றவர்கள். அவர்கள் தம் விருப்பங்களை யாகங்கள் செய்து தெய்வத்தின் முன் வைத்தார்கள். மகப்பேறு வேண்டுமென்றோ, நற்கதி அடைய வேண்டும் என்றோ அவர்கள் வேண்டிப் பெற்றார்கள்'' என்றார்.

அப்போது சியாமளா ''அப்படியானால் யாகங்கள் பல வகையானவை என்றா கூறுகிறீர்கள்?'' என்று தாத்தாவைக் கேட்டாள்.

சோமநாதரும் ''யாகத்தில் வெளிப்படையாகத் தெரிவது அதில் மூட்டி வளர்க்கப்படும் தீ. தீ உயர்ந்து எரிவது போல நம் ஆசைகளும் விருப்பங்களும் உயர்ந்து கொண்டே போகின்றன. தீ எப்படி உலோகங்களை எரித்து சுத்தமாக்கி விடுகிறதோ அப்படி நம் எண்ணங்களில் தீயனவற்றை யாகத் தீ பொசுக்கி அழித்து விடுகிறது. கடவுளுக்கு எதையும் அர்ப்பணிப்பவன் தனக்குள்ளேயே யாகத்தைச் செய்கிறான். சமூக அமைப்பிலும் பலர் தமது அரிய செல்வங்களைப் பிறருக்குக் கொடுத்து விடுவதையும் காணலாம். ஏற்கனவே உங்களுக்கு ஹரிச்சந்திரனின் கதையைக் கூறி இருக்கிறேன். உங்களுக்கு கொடையாளி கர்ணனின் பெயர் தெரியுமல்லவா?'' என்று கேட்டார்.

சேகரும் சியாமளாவும் ''ஓ! நன்கு தெரியுமே'' எனவே சோமநாதரும் ''அவன் தன் உயிரையே காத்து வந்த குண்டலங்களையும் கவசத்தையும் அவற்றைத் தன்னிடம் யாசித்த அந்தணனுக்குக் கொடுத்தவன். அந்தக் கர்ணனைப் பற்றி இன்னொரு கதை கூறுகிறேன். ஒரு முறை கர்ணன் சிலரோடு அமர்ந்து உணவு உண்டு கொண்டிருந்தான். அப்போது ஒரு அந்தணன் அங்கு வந்து தன் மகளின் திருமணம் நடக்க உதவுமாறு கர்ணனை வேண்டினான். கர்ணன் வலது



கையால் சாப்பிட்டுக் கொண்டிருந்த தால் இடது கையால் தான் அணிந்தி ருந்த முத்து மாலையைக் கழற்றி அந்த அந்தணனிடம் கொடுத்து அனுப்பி னான். அதைக் கண்டு கர்ணனோடு அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த வர்களில் ஒருவர் ''தாங்கள் இடது கையால் தானம் கொடுத்தது முறை யல்லவே'' என்றார். கர்ணனும் ''அந் தணர் தானம் கேட்டதும் நான் அவருக்கு என் முத்து மாலையைக் கொடுத்து விடுவது என்று எண்ணி உடனே கொடுத்து விட்டேன். நான் எழுந்து கையை அலம்பிக் கொண்டு தானம் கொடுக்க முயன்றிருந்தால் என் மனம் மாறிக் கூடப் போயிருக்கும். அதனால் தான் இடது கையாலேயே தானம் செய்தேன்'' என்றான்'' எனக் கூறி நிறுத்தினார்.

சேகரும் ''இப்படிப்பட்ட கொடையாளிகள் கூட இருந்திருக் கிறார்களா?'' என்று ஆச்சரியப்பட்ட வாறே கேட்டான்.

சோமநாதரும் ''கொடையாளி களும் நம் நாட்டில் இருந்திருக் கிறார்கள். இப்போதும் அத்தகைய வர்கள் இருக்கத்தான் இருக்கிறார்கள். இலக்கியங்களும் புராணங்களும் யா வருக்கும் அவை பற்றி நினைவூட்டி வருகின்றன. இதற்கு ஒரு உதாரணம் மயூரத்துவஜன் என்ற மன்னன்'' என்று கூறி நிறுத்தி விட்டுப் பிறகு தொடர்ந்து கூறலானார்.

ரத்தின நகரை மயூரத்துவஜன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அப்போது தருமர் ஹஸ்தினாபுரத்தின் மன்னராக இருந்தார். இரு மன்னர்களிடமும் அவர்களது ராஜகுருக்கள் ஒரே சம



யத்தில் ராஜசூயயாகம் செய்யும்படிக் கூறினார்கள். அந்த யாகத்தை ஒரு மன்னன் செய்தால் அவன் சக்கர வர்த்தியாகி விட முடியும். இதற்காக அந்த மன்னன் ஒரு குதிரையை அலங் கரித்து அதன் பின்னால் தன் படையை போகச் செய்து அக்குதிரை எல்லா நாடுகளுக்குப் போய் விட்டுத் திரும்பி வர வேண்டும். எந்த நாட்டு மன் னனும் அந்தக் குதிரையைப் பிடித்துக் கட்டாமல் தன் நாட்டின் வழியே போக அனுமதித்தால் அவன் ராஜசூய யாகம் செய்யும் மன்னனை சக்கர வர்த்தியாக ஏற்கிறான் என்றாகும். குதிரையைத் தடுத்தால் அதன் பின் வரும் படையுடன் அந்நாட்டு மன்னன் போரிட வேண்டும்.

தருமரின் குதிரைக்குப் பின்னால் கிருஷ்ணரும் அர்ஜுனனும் படை யுடன் சென்றனர். அப்போது தமக்கு எதிரில் மயூரத்துவஜனின் யாக குதிரை வருவதை அவர்கள் கண்டார்கள். அதன் பின்னால் மயூரத்துவஜனின் மகன் சுசித்திரன் படையுடன் வந்து கொண்டிருந்தான். அவனது குதிரை யைத் தடுக்க கிருஷ்ணரும் அர்ஜுன னும் தீர்மானித்தனர். ஆனால் மயூரத் துவஜனின் குதிரை அவர்களைக் கடந்து சென்ற போது அவர்களது கண்கள் கூசின. அவர்கள் எதுவும் செய்ய முடியாமல் கற்சிலை போல நின்றனர்.

மயூரத்துவஜன் கொடையாளி என்றும் யார் எதைக் கேட்டாலும் அதைக் கொடுத்து விடுவானென்றும் யாரோ அர்ஜுனனிடம் கூறினார். அதனால் கிருஷ்ணரும் அர்ஜுனனும் வழிப்போக்கர்கள் போல வேஷம் போட்டுக் கொண்டு போய் மயூரத் துவஜனைக் கண்டனர். கிருஷ்ணர் அவனிடம் ''அரசே! நாங்கள் காட்டு வழியாக வந்த போது ஒரு பயங்கர சிங்கத்தைக் கண்டோம். அது என் மகனைப்பிடித்துத் தன் குகைக்குள் எறிந்து சாவகாசமாக அவனைத் தின்ன எண்ணியது. நாங்கள் அதனிடம் என் மகனை விட்டு விடும்படியும் எங் களில் ஒருவரை இரையாக்கிக் கொள்ளும்படி வேண்டினோம். ஆனால் அது தனக்கு ஒரு தர்மவான் கிடைத்தாலே என் மகனை விட முடியும் என்று கூறி விட்டது. எங்களுக்கு அப்படி யாரும் கிடைக்க வில்லை. தர்மவானின் அரைஉடல் கிடைத்தால் கூடப் போதும், சிங்கம் என் மகனை விட்டுவிடும். நீங்கள் தான் அந்த தர்மவான் என்று அந்த சிங்கம் கூறுகிறது. நீங்கள் உங்கள் உடலில் பாதியைக் கொடுத்து என்

மகனைக் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டினார்.

மயூரத்துவஜன் பதில் சொல்வதற்குள் அவனது மனைவி ''மனைவி கணவனின் பாதி பாகம். எனவே என்னை சிங்கத்திடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்று கிருஷ்ணரிடம் வேண்டினாள்.

அப்போது கிருஷ்ணர் ''அம்மணீ! மனைவி கணவனின் இடப் பகுதியாக இருப்பவள். எனவே சிங்கம் உங்கள் கணவரின் உடலில் வலப்பகுதியைத் தான் தின்ன விரும்புகிறது'' என்றார்.

உடனே மயூரத்துவஜன் தன் வாளை உருவி கிருஷ்ணரிடம் கொடுத்து ''தாமதிக்காமல் என் உடலை இரண்டாக வெட்டி வலப் பகுதியை எடுத்துக் கொண்டு போய் சிங்கத்திடம் கொடுத்து உங்கள் மகனைக் காப்பாற்றுங்கள்'' என்றான்.

கிருஷ்ணர் வாளை வாங்கிக் கொண்டு மகரத்துவஜனின் உடலை வெட்டப் போவது போலப் பாசாங்கு செய்தார். ஆனால் அப்போது மன்னனின் இடது கண்ணிலிருந்து கண்ணீர் வருவது கண்டு கிருஷ்ணர் ''மன்னா! நீங்கள் அழுது கொண்டே இந்த தானத்தைச் செய்வது முறையா?'' என்று கேட்டார்.

மயூரத்துவஜனும் ''ஐயா! என் இடது கண்ணிலிருந்து கண்ணீர் வருவதைக் கவனித்தீர்களா? என் உடலின் இடப் பகுதி வலப்பகுதியைப் போல தான் பயன்படவில்லையே என்று வருத்தப்பட்டுக் கண்ணீர் விடுகிறது'' என்றான்.

கிருஷ்ணரும் அர்ஜுனனும் தம் வேடங்களைக் கலைத்து விட்டு உண்மையில் தாம் யாரென்கதைக் கூறினார்கள். அவர்கள் மகரத்துவஜனின் ராஜசூய யாகத்தைப் பார்த்தார்கள். அதன் பின் அவர்களுடன் மகரத்துவஜன் சென்று தருமரின் ராஜசூய யாகத்திற்குச் சென்றான்.

''கதை மிக நன்றாக இருக்கிறது'' என்றாள் சேகரின் தாய்.

சோமநாதரும் ''நம் பழங்காலத்தவர்கள் எவ்வளவு உயர்ந்தவர்கள் என்பதைத் தெரிந்து கொண்டீர்கள். அவர்களது இந்தப் பண்பாடுகளை நாம் புராணக்கதைகள் வாயிலாகத் தெரிந்து கொள்கிறோம்'' என்றார்.



# பாங்கான பரத நாட்டியம்

பரத நாட்டியத்தில் நடை, உடை, பாவம் ஆகியவற்றைக் கண்டுகளிக்காதவர் யார் இருக்கி றார்கள்? பிரம்மாவின் படைப்பு தான் இந்த நாட்டியம்.

ஒரு முறை தேவர்களும் கந்தர்வர்களும் பிரம்மதேவ ரிடம் போய் எல்லோரும் நன்கு புரிந்து கொள்ளும் விதத்தில் ஒரு புதிய வேதத்தை அளிக்குமாறு வேண்டினார் களாம். அதனால் பிரம்மா நான்கு வேதங்களிலிருந்து முக்கிய அம்சங் களை எடுத்து நாட்டிய வேதம் என்று அளித்தார். ரிக் வேதத்தில் இருந்து சொற் களையும் (பதம்) யஜுர் வேதத்தில் இருந்து அபிநயத்தையும், சாம வேதத்திலிருந்து இசை யையும், அதர்வண வேதத் திலிருந்து ரச பாவத்தை யும் (உணர்ச்சி) எடுத்து இது தொகுக்கப்பட்டது.

இந்த நூலை பிரம்மா பரத முனிவரிடம் கொடுத்து மக்க ளுக்குப் போதிக்கும்படிக் கூறினாராம். இந்த வேதத்தின் உதவியால் அம்முனி வர் இந்திய இசை, நாடகம், நாட்டியம் ஆகியவற்றை எடுத்துக் கோர்வையாக இந்த நூலை அளித்தார். இதுவே நடனக் கலைக்கு அடிப்படையாக அமைந்தது.

இந்தியாவில் நாட்டிய முறைகளில் மிகமிகப் பழமையானது பரத நாட்டி யம். தமிழ்நாட்டு ஆலயங்களில் பல் வேறு நிலைகளிலுள்ள பரத நாட்டியச்



சிற்பங்களைக் காண்கிறோம். சங்ககால இலக்கிய நூல்களான சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் இந்த நாட்டியம் பற்றிக் குறிப்பிட்டு உள்ளது.

ஹிந்து புராணங்களின்படி நடனத்திற்கு அதிபராக விளங்குபவர் சிவபெருமான் தான். அவரும் அவரது மனைவி பார்வதிதேவியாரும் இந்த தெய்வீகக் கலையை ஆடிக் காட்டி அளித்தனர். சிவபெருமான் ஆடிய நடனம் தாண்டவம் எனப் பெயரிடப்பட்டது. மகிழ்ச்சியுடன் ஆடப்படும் தாண்டவத்தை ஆனந்தத் தாண்டவம் என்று கூறினார்கள். கோபத்தையும் வலிமையையும் காட்டும் நடனத்தை ருத்திர தாண்டவம் என்று அழைத்தனர். பார்வதி தேவியார் ஆடிய நடனம் கண்ணுக்குக் குளிர்ச்சியாய் மேன்மையாக இருந்தது. இதனை லஸ்யம் என்றனர்.

பரத நாட்டியத்தில் பாடப்படும் பாடல்கள் ஹிந்து புராணங்களை அடிப்படையாகக் கொண்டவை. பாடகருக்குப் பக்க வாத்தியங்களாக மிருதங்கமும் வயலினும் இருக்கின்றன. நட்டுவனார் ஸ்வரங்களைப் பாடுகிறார்.

முன் காலத்தில் பரத நாட்டியம் ஆடுபவர்கள் ஆலயங்களில் அமர்த்தப்பட்ட தேவதாசிகளே. மன்னர்களின் அவைகளில் ராஜ நர்த்தகிகள் எனப்படும் நடன மாதுகள் நடனமாடி வந்தனர். தமிழக மன்னர்கள் இசைக் கலையையும் நடனக் கலையையும் பேணி வளர்த்தனர்.

இருபதாவது நூற்றாண்டில் தேவதாசி முறை ஒழிக்கப் பட்டதால் நடனக் கலைக்குக் குந்தகம் ஏற் பட்டது. ஆனால் இந்தக் கலை அழிந்து விடவில்லை. நம் நாடு சுதந்திரம் அடைந்த பின் நடனக்கலை புத்துயிர் பெற்றது. ஈ. கிருஷ்ணய்யர், பால சரஸ்வதி, ருக்மிணி அருண்டேல் போன்றவர்கள் இக்கலையில் மிக்க ஆர்வம் கொண்டு தழைக்கச் செய்தனர்.





★ பரதநாட்டியம் என்ற சொல்லின் 'ப' என்ற எழுத்து பாவத்தையும் 'ர' என்பது ராகத்தையும் 'த' என்பது தாளத்தையும் குறிக்கிறது.

★ பரத நாட்டியக் கலைஞர் ஒருவரின் முதலாவது நடனக் கச்சேரியை அரங்கேற்றம் என்கிறார்கள். இது தமிழ் மக்கள் அனுசரிக்கப்படும் முறையாகும்.

★ அரங்கேற்றம் நடப்பதற்கு முன் நடனக் கலைஞர் 'சலங்கை பூஜை'யைச் செய்கிறார். முன் காலத்தில் ஒரு நடனக் கலைஞர் 'அரங்கேற்றம்' ஆவதற்கு முன் கால்களில் சலங்கை கட்டிக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை.

## வங்காள நாட்டுப்புறக் கதை

மேற்கு வங்க மாநிலம் மூன்று நாடுகளால் சூழப்பட்டுள்ளது. அவை பங்களாதேஷ், நேபாளம், பூடான் ஆகிய நாடுகள். மேற்கு வங்காளம் வடக்கு அட்ச ரேகைகள் 21க்கும் 27க்கும் இடையிலும் கிழக்கு தீர்க்க ரேகை 86க்கும் 89க்கும் இடையிலும் அமைந்துள்ளது. இம்மாநிலத்தின் வழியே கடக ரேகையும் செல்கிறது.

இந்தியாவின் ஒன்பது கடற்கரை மாநிலங்களில் மேற்கு வங்காளமும் ஒன்று. ஆனால் இந்த மாநிலம் கடற்கரை முதல் பனி படர்ந்த இமயமலை வரை பல்வித நில அமைப்புகளைக் கொண்டுள்ளது. நம் நாட்டிலேயே இம்மாநிலத்தில் தான் அடர்ந்த பெரிய காடு உள்ளது. மேற்கு வங்காளம் ஏழு வடகிழக்கு மாநிலங்களுக்கு நுழைவாசல் போல உள்ளது. இதன் பரப்பளவு 88,752 சதுர கிலோமீட்டர். மக்கள் தொகை 80,221,171.

மேற்கு வங்காளத்து சுந்தர் வனக்காடுகள் வங்கள புலிகளின் உறைவிடங்களாம். புலிகளை பேணும் திட்டத்தின் கீழ் மத்திய அரசாங்கம் சுந்தர் வனங்களை தேசீயப்பூங்கா எனவும் புலிகள் சரணாலயம் எனவும் அறிவித்து உள்ளது.

# பிராம்மணனும் தலைவிதித்தேவனும்

வெகு காலத்திற்கு முன் வங்காளத்து சோனார்பாரா என்ற கிராமத்தில் ஒரு பிராம்மணன் வாழ்ந்து வந்தான். அவனது வாழ்வில் விசித்திரம் என்னவென்றால் அவனால் ஒரு நாள் கூட வயிறு நிறையச் சாப்பிட முடியாமல் போவது தான். இது அவன் தலையில் எழுதப்பட்ட விதி. பிராம்மணன் இப்படி தனக்கு எழுதிய விதித்தேவனை வைது கொண்டிருந்தான்.



அந்த தேவன் எழுதியதிலிருந்து தப்ப அந்த பிராம்மணனால் முடிய வில்லை.

ஒரு முறை அந்நாட்டு மன்னர் அந்தப் பிராம்மணனை தன் அரண் மனை விருந்திற்கு அழைத்து இருந் தார். அழைப்பைப் பெற்ற பிராம் மணன் உற்சாகத்துடன் தன் மனைவி யிடம் "அரண்மனை விருந்தில் தான் நான் வயறு நிறையச்சாப்பிடப் போகி றேன். அங்கே போக சலவை செய்த ஆடைகள் வேண்டும். அவற்றைத் தயாராக வை" என்றான்.

விருந்திற்குக் கிளம்பு முன் சலவை செய்யப்பட்ட தோத்தியையும், குர்த் தாவையும் அணிந்து கொண்டான். அவன் அரண்மனைக்குச் செல்லும் வழியில் 'கஷ்' மலர்களின் நறு மணத்தை அனுபவித்தவாறே சென் றான். அரண்மனையை அடைந்த போது அவர் அன்புடன் வரவேற்கப் பட்டு உள்ளே அழைத்துச் செல்லப்பட்டான்.

அவன் உணவு உண்ண உட் கார்ந்ததும் அவர் முன் ஒரு பெரிய வெள்ளித் தட்டு வைக்கப்பட்டது. அதில் 'மாச்சர் ஜோச' 'ஆலூ போஸ்டோ' 'பேகன் பாஜா' என்று வகை வகையான கறிகள் வைக்கப் பட்டிருந்தன. 'ஜல்பாய் சட்னியும் 'மிஷ்டி தோயி' யும் மற்றும் இருபது வகைப் பதார்த்தங்களும் பரிமாறப் பட்டன.

பிராம்மணன் ஒரேயடியாக

## கலை, கைவினைப் பொருள்கள்

மேற்கு வங்காளம் கலையம்சம் பொருந்திய கைவினைப் பொருள்க ளுக்குப் பெயர் பெற்றது.



இதன் கைத் தறித் துணிகள் இந்தியா முழு வதிலும் புகழ் பெற்றவை. தன் கெய்ல், தனே கலித் துணிகளும் மூர்ஷிதாபாத் பட்டும் மிகவும் புகழ் பெற்றவை.

பாங்குராவும் பிஷ்ணுபூரும் அழகிய துணி, மண் பொம்மைகளுக்குப் பெயர் போனவை. பிஷ்ணுபூரில் பல ஆலயங் கள் உள்ளன. இங்கு சங்கில் வேலைப் பாடு செய்யப்பட்ட பொருள்களும், பட்டு, நகைகள், பலுசேரி புடவைகள் எனப் பல அழகிய பொருள்களும் கிடைக்கின்றன.

குமர்துலி சிற்பிகளுக்குப் பெயர் பெற்றது. துர்க்கா பூஜைக்கான துர்க்கா தேவியின் சிலைகளும், மற்ற கடவுள் களின் சிலைகளும் இங்கு செய்யப் பட்டு மாநிலம் முழுவதும் அனுப்பப் படுகின்றன. இவை வெளிநாடு களுக்கும் அனுப்பப்படுகின்றன.

புருலியா சாஹா என்பது புருலியா மாவட்டத்தின் பிரத்யேக நடனக்கலை. இங்கு செய்யப்படும் முகமூடிகளும் களி மண் உருவங்களும் விரும்பி வாங்கப் படுகின்றன.





மகிழ்ந்து போய்ச் சாப்பிடலானான். அவனது தலைக்குமேல் உயரத்தில் ஒரு உறி கட்டப்பட்டிருந்தது. அதில் ஒரு சட்டியில் தயிர் இருந்தது. திடீரென உறி அறுந்து தயிர்ச்சட்டி பிராம்மணன் சாப்பிட்டுக் கொண்டு இருந்த தட்டினருகே விழுந்து உடைந்தது. தயிரும் சட்டியின் சில்களும் பிராம்மணன் சாப்பிடும் தட்டில் விழுந்தன. இதனால் பிராம்மணன் எழுந்து விட்டான். முழு வயிறு சாப்பிட முடியவில்லை.

மன்னன் அவன் கை அலம்பிக் கொண்டு வந்ததும் நன்கு சாப்பிட்டீர்களா என்று விசாரித்தான். அப்போது சாப்பிடவில்லை என்று கூறி அவன் தன் தலைவிதி பற்றி மன்னனிடம் விவரமாகக் கூறினான்.

## பண்டிகைகளும் விழாக்களும்

மேற்கு வங்காளத்தில் தசரா துர்க்கா பூஜை என்று கொண்டாடப்படுகிறது. மகிசாசுரனை துர்க்காதேவி வென்றதை இது நினைவுறுத்துகிறது. இப்பண்டிகை அக்டோபர்-நவம்பர் மாதங்களில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.



சாகரதீபத்தில் மகரசங்கிராந்தி ஜனவரியில் கொண்டாடப்படுகிறது. வங்காளிகளின் புத்தாண்டு ஏப்ரலில் ஆரம்பமாகிறது. செப்டம்பரில் தேவ சிற்பியான விஸ்வ கர்மாவுக்குப் பூஜை நடக்கிறது. இச் சமயத்தில் பட்டங்கள் உயரப் பறக்கவிடப்படுகின்றன. தீபாவளி சியாமா அல்லது காளி பூஜையுடன் கொண்டாடப்படுகிறது.

அதைக்கேட்டு மன்னன் வருந்தி ''தாகுர் மோஷய்! இன்றிரவு இங்கு தங்குங்கள். நாளை உங்களுக்கு நல்ல விருந்து அளிக்கிறேன்'' என்றார்.

அதன்படி அடுத்த நாள் பிராம் மணன் விருந்து சாப்பாட்டைச் சாப் பிட உட்கார்ந்தான்.

அப்போது தலை விதியை நிர்ணயிக்கும் தேவன் இந்தப் பிராம்மணன் சாப்பிடுவதை எப்படித் தடுத்து நிறுத்துவது என்று யோசித்தான்.

எனவே அவன் ஒரு சிறு தவளை யாக மாறி பிராம்மணன் சாப்பிடும் சாதத்தில் புகுந்து விட்டான். பிராம் மணனும் சாதத்தை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளும் போது அதை கவனிக்கவில்லை. அதனால் சாதத் தோடு அந்தச் சிறு தவளை அவனது வயிற்றுக்குள் போய் விட்டது.

பிராம்மணனும் வயிறு நிறையச் சாப்பிட்டு எழுந்து கை அலம்பிக் கொண்டு மன்னன் கொடுத்த 'மிஷ்டி பான்' னை வாங்கி வாயில் போட்டுக் கொண்டான். மன்னனும் அவனுக் குப் பல பரிசுகளை அளித்து அவனை அவனது ஊருக்கு அனுப்பினான்.

பிராம்மணன் வயல்களின் வழியே நடந்து சென்ற போது ''ஓகோ! பிராம் மணா! என்னை வெளியே விட்டு விடு'' என்ற குரல் கேட்டது.

அக்குரல் எங்கிருந்து வருகிறது என அவன் பார்த்தான். சுற்றிலும் யாரும் இல்லாததால் 'கேது மீ' (நீ யார்) என்று கேட்டான். உடனே ''நான் தான் உன் தலை எழுத்தை எழுதும் தேவன்'' என்று பதில் வந்தது.

அது கேட்டு பிராம்மணன் ''நீ எங்கே இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

''உன் வயிற்றுக்குள் இருக்கிறேன். நீ சாதம் சாப்பிடும் போது அதோடு சேர்ந்து உன் வயிற்றுக்குள் போய் விட்டேன்'' என்றது அக்குரல்.

பிராம்மணனும் ''ஓ! இதுவா சங்கதி! அதனால் தான் வயிறு நிறைய இன்று நான் சாப்பிட முடிந்துதா? இனிமேல் நீ என்னிடம் வாலாட்ட முடியாது. என்னிடம் நன்றாக அகப் பட்டுக் கொண்டாயா? உன்னை நான் வெளியே விட்டேன். 'பேஷ் கரேசி' என்று கூறித் தன் வாயை இறுக மூடிக்





தலைவிதி தேவனை உன் வயிற்றில் சிறை வைத்திருக்கிறாய். அத னால் மூவுலகில் எல்லா வேலை களும் நின்று போயின. எனவே அவனை உடனே விடுதலை செய்'' என்றாள்.

அதைக்கேட்ட பிராம்மணன் கோபம் கொண்டு ''நான் சிரமப் பட்ட போதெல்லாம் திரும்பிக் கூடப் பார்க்காத நீ இப்போது யாருக்காகவோ சிபாரிசு செய்கி றாயே. உனக்கு சரியான புத்தி புகட்டுகிறேன் பார்'' எனக் கூறிய வாறே தன் மனைவியிடம் குண்டாந்தடியை எடுத்து வரும் படி உரக்கக் கத்தினான்.

அதைக் கேட்ட லக்ஷ்மிதேவி எங்கே பிராம்மணன் குண்டாந் தடியால் அடித்து விடுவானோ எனப் பயந்து தேவலோகத்திற்கு ஓடிப் போனாள். அங்கு தேவர்களிடம் அவள் தன்னால் தலை விதி தேவனை விடுவிக்க முடியவில்லை என்று கூறினாள்.

தேவர்கள் உடனே சரஸ்வதி தேவியை பூவுலகிற்கு அனுப்பினார் கள். சரஸ்வதி தேவியும் பிராம் மணனைக் கண்டு தலைவிதித்தே வனை விடுதலை செய்யும்படிக் கோரினாள்.

அதைக் கேட்ட பிராம்மணன் ''இப்போது தான் உனக்கு என் நினைவு வந்ததா? நான் இளைஞனாக இருந்த போது கல்வி கற்க நீ எனக்குக்

கொண்டான்.

அதன் பின் பிராம்மணன் தன் வாயைத் திறக்காமல் நடந்து சென்று கொண்டிருந்தான். இதற்குள் மூவுல கிலும் ஒரே குழப்பம் ஏற்பட்டது. எல்லோர் தலைவிதியையும் நிர்ண யிக்கும் தேவன் செயல்படாததால் எதுவும் சரியாக நடக்காமல் நின்று போயிற்று. அவன் பிராம்மணனின் வயிற்றில் சிறைப்பட்டிருக்கிறான் என்று தேவர்களுக்குத் தெரிந்தது. தேவர்கள் ஒன்று கூடி யோசித்து அத் தேவனை விடுவித்து வர லக்ஷ்மி தேவியை பிராம்மணனிடம் அனுப்பினார்கள்.

லக்ஷ்மி தேவியும் பூவுலகிற்கு வந்து பிராம்மணனைக் கண்டு ''நீ

கொஞ்சமாவது அருள் புரிந்தாயா? இல்லையே. அதனால் உனக்கும் லக்ஷ்மி தேவிக்குச் சொன்ன பதில் தான். போ, போ'' என்று கூறி விரட்டி விட்டான்.

சரஸ்வதி தேவியும் தேவ லோகத்திற்குப் போய்த் தன்னாலும் தலை விதித்தேவனை பிராம்மணனிட மிருந்து விடுவிக்க முடியவில்லை என்று கூறினாள். அதைக் கேட்ட சிவபெருமான் தேவர்களிடம் ''கவலைப் படாதீர்கள். நான் போய் தலைவிதித் தேவனை மீட்டு வருகிறேன்'' என்று கூறி பூவுலகத்திற்குச் சென்றார்.

சிவபிரான் பிராம்மணனைக் கண்டதும் அவன் அவரை வணங்கினான். ஏனெனில் அவன் சிவ பக்தன். அவர் தலைவிதித்தேவனை விடுதலை செய்யும்படிக் கூறவே, பிராம்மணனும் ''தாங்கள் சொல்வதால் அவனை விட்டு விடுகிறேன். ஆனால் என் பிரச்சினை தீர ஒரு வழி செய்யுங்கள்'' என்று வேண்டினான்.

சிவபிரானும் ''கவலைப்படாதே. இனிமேல் வயிறு நிறையச் சாப்பிட முடியவில்லையே என்ற மனக்குறை இராது. உன்னையும் உன் மனைவி யையும் இப்போதே சொர்க்கத்திற்கு அழைத்துச் சென்று விடுகிறேன்'' என்றார்.



பிராம்மணனும் தலைவிதித்தேவனை உடனே விடுதலை செய்து விட்டு, தன் மனைவியுடன் சிவ பெருமானுடன் போய் சொர்க்கத்தை அடைந்தான்.

## சுற்றுலா இடங்கள்

மேற்கு வங்காளத்தின் தலைநகர் கோல்கத்தா நீண்ட வரலாற்றுப் புகழ் பெற்றது. இங்கு விக்டோரியா நினைவு மனை, ஹௌராபாலம், காளி காட்டிலும் தட்சிணேஷ்வரி லும் உள்ள காளி கோயில்கள் காணத் தக்கவை.

இமயமலையில் அமைந் துள்ள டார்ஜிலிங் நகரம் ஒரு கோடை வாசத்தலம். சிலிகுரி லிருந்து டார்ஜிலிங் செல்லும் பொம்மை போன்ற ரயில் வண்டி சுற்றுலாப் பயணி களைக் கவர்ந்து இழுக்கிறது. டார்ஜிலிங் அதன் குளிர்ச்சிக் கும் அழகிய இயற்கைக் காட்சிகளுக்கும் பெயர் பெற்றது. டார்ஜிலிங்கை சுற் றிப் பார்க்கப்பட வேண்டிய இடங்கள், காலிம்போங், குர்சேயோங், டைகர் குன்று கள் என்பனவாம்.

டார்ஜிலிங்கின் தேயிலை எஸ்டேட்களில் உலகில் மிக உயர்ந்த தேயிலை கிடைக் கிறது. கோல்கத்தாவின் அருகில் தான் போல்பூரில் குருதேவ் கவி ரவீந்திர நாத டாகூர் நிறுவிய சாந்தி நிகே தன் உள்ளது. இதன் விசுவ பாரதி பல்கலைக்கழகம். உல கிலே புகழ் பெற்றது. குறிப் பாக இங்கு பல கலைகள் சிறப்பாகக் கற்பிக்கப் படுகின்றன.

# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள்



அக்பர் சக்கரவர்
சிம்மாசனத்தில் அமர்
சுற்றிலும் பார்த்தார். அ
அன்று விடுகதைகள் பே
எண்ணினார். 'உலகில் எ
மலர் சிறந்தது?' என்று அ
கேட்க தர்பாரில் இருந்தவர்
ஒருவரை ஒருவர் பார்த்தனர்.

ஒருவர் தனக்கு அதற்கு விடை தெரிந்து விட்ட தாக எண்ணி அக்பரருகே சென்றார். ஒரு சிறு அத்தர் பாட்டிலை எடுத்து அத் தரின் ஒரு சொட்டை அக்ப ரின் புறங்கையில் விட்டார். அக்பரும் அதை முகர்ந்து விட்டு ''ரோஜா என்பதா உங்கள் விடை?'' எனவே அவர் பெருமிதத்துடன் ஒரு புன்னகையை உதிர்த்தார்.





அக்பர் பதிலுக்கு எதுவும் கூறாது போகவே, இன் னொருவர் எழுந்து தன் மணிக் கட்டைக் காட்டினார். அதில் மல்லிகைச் சரம் சுற்றப்பட்டு இருந்தது. ''மல்லிகை தானே'' என அவர் சக்கரவர்த்தியிடம் கேட்டார்.

அக்பர் அதற்கும் பதில் கூறவில்லை. வேறொரு வர் தூணில் பொறிக்கப் பட்டு இருந்த தாமரை மலரைச் சுட்டிக் காட்டி னார். பிறகு ''தாமரை மலர் தானே சிறந்தது எனத் தாங் கள் கருதுகிறீர்கள்?'' என்று கேட்டார். அதற்கும் இல்லை என்பது போல அக்பர் தலையை அசைத்தார்.





அக்பர் சுற்றிலும் பார்த்தார். வேறொருவர் எழுந்து சிம்மா சனத்தின் இரு புறங்களிலும் வைக்கப்பட்டிருந்த மலர்க் கொத்துகளைச் சுட்டிக் காட்டி ''குமுத மலரைத் தானே தாங்கள் சிறந்ததாகக் கருது கிறீர்கள்?'' என்று கேட்டார்.



''மலர்கள் கண்கவர் வண்ணத் துடனும், மனம் கவரும் நறுமணத் துடனும் தூண் மீதோ அல்லது சிம்மா சனத்தினருகிலோ கம்பீரமாக இருக்க லாம். ஆனால்...'' என்று கூறி அக்பர் ''பீர்பல் எங்கே? காணோமே'' என்று கேட்டார்



''இதோ இருக்கிறேனே'' என்று கூறிய வாறே பீர்பல் தம் இருக்கையிலிருந்து எழுந்தார். ''நாம் எந்த மலரைப் பயன் படுத்துகிறோமோ அது தான் சிறந்தது'' என்று அவர் அக்பரைப் பார்த்துக் கூறினார். தர்பாரில் இருந்தவர்கள் இதென்ன விடை என்று எண்ணிக் குழம்பினார்கள்.

பீர்பலும் ''நாம் அணியும் ஆடை பருத்திப் பூ வெடிக்க அதில் இருக்கும் பஞ்சைக் கொண்டு தயாரிக்கப்படு கிறது. பருத்திப் பூ இல்லா விட்டால் நமக்கு ஆடை களே இராதே'' என்றார். அது கேட்டு மகிழ்ந்து அக்பர் ஒரு முத்து மாலையை பீர்பலுக்குப் பரிசாக அளித்தார்.



## முற்றிலும் தனியாரதே!

நான்கு மாதங்களுக்கு முன் பல கோடிகளுக்கு அதிபரான அமெரிக்கர் டென்னிஸ் டிட்டோ இரண்டு ரஷ்ய விண்வெளி வீரர்களுடன் விண்வெளிக் கலத்தில் ஏறி ஒரு வாரம் வெண் வெளியில் இருந்து விட்டுத் திரும்பி வந்தார் என்ற செய்தியைப் பத்திரிகைகளில் படித்தோம். இந்தப் பயணம் பெரும் சர்ச்சையைக் கிளப்பியது. இப்போதோ ஸ்டெவ் பென்னெட் என்ற ஆங்கிலேயர் தானே லட்சம் பவுன்கள் செலவில் விண்கலத்தைத் தயாரித்து தானே அதனைச் செலுத்திக் கொண்டு விண்வெளியில் இருந்து விட்டு வரப் போகிறாராம். 30 அடி நீளமுள்ள நோவா என்ற இந்த விண்கலம் மணிக்கு 6400 கி. மீ வேகத்தில் செல்லக் கூடியதாம். இப்பயணத்திற்காக பென்னட் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கிறார். இந்த ஆண்டின் கடைசியில் இந்தப் பயணம் நடக்கப் போகிறதாம்.




## சும்மா வேடிக்கை தான்!



விளையாட்டுகளில் ஆர்வம் கொண்ட ஒருவர் பாரிஸின் ஈபல் கோபுரத்திலிருந்து பாராசூட் உதவியுடன் கீழே குதித்தார். ஆனால் தரையில் அவர் அடி வைத்ததும் அவரைப் பிரெஞ்சு போலீசார் பிடித்துக் கொண்டனர். அவரோ ''நான் எந்தச் சட்டத்தையும் மீற வில்லையே'' எனவே போலீசார் அவரை எந்த சட்டத்தின் கீழும் கைது செய்ய முடியாமல் திகைத்தார்கள். ஒரு போலீஸ் அதிகாரி அவரிடம் 'ஏன் இப்படிச் செய்தீர்கள்?' என்று கேட்டதற்கு அவர் ''சும்மா வேடிக்கைக்குத் தான் இதைச் செய்தேன்'' என்றாராம்.

# கோர்ட்டுக்குத் தள்ளப்பட்டார்!




ஒருவர் நாற்காலியில் உட்காரப் போகும் போது பின்னாலிருந்து வேறொருவர் அந்த நாற்காலியை நகர்த்திவிட்டு அவரைக் கீழே தள்ள வைப்பது சாதாரணமாக குறும்புக்காரர்கள் செய்யும் விளையாட்டு. ஒரு பேராசிரியர் சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு வழக்காடி எப்படி நஷ்ட ஈடு பெறுவது என்பதை விளக்கினார். அது எப்படி என்பதை விளக்க அவரே ஒரு மாணவி உட்காரப் போகும் நாற்காலியை அவளுக்குத் தெரியாமல் தள்ளிவிட்டார்.

உட்காரப் போன மாணவி விழுந்து படுகாயப்பட்டதால் அவள் நஷ்டஈடுகோரி அந்தப் பேராசிரியர் மீது வழக்குத் தொடுத்து விட்டாள்!

# மறைந்து கொண்டே போகிறது!

பிராணிகள், மரங்கள், பறவைகள் முதலியனவற்றில் அபூர்வமானவை மறைந்து வருவது போல சில மொழிகளும் மறைந்து கொண்டே போகின்றன. அமெரிக்காவின் அலாஸ்கா மாநிலத்தில் பேசப்படும் இயாக் என்ற மொழி மறைந்து போய்க் கொண்டிருக்கிறது. இப்போது அங்கு இம்மொழியில் பேசக் கூடியவர் மாரிஸ்மித் என்ற ஒருவர் தான். இவருக்கு 83 வயதாகிறது. இவர் இறந்து விட்டால் இயாக் மொழியைப் பேசுபவர் வேறு யாரும் இருக்க மாட்டார்கள். யுனெஸ்கோவின் கணிப்புப் படி உலகில் 6800 மொழிகள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் 2500ம் அதற்கு மேற்பட்டவர்களாலும் பேசப் படுகின்றது. அடுத்த நூறு ஆண்டுகளில் இவற்றில் 90 சதவீத மொழிகள் மறைந்து விடுமாம். ஒரு மொழி மறைந்தால் ஒரு வகை கலாசாரமும் மறைந்து தான் போய் விடும்.






# வாய்ச்சொல் வீரன்

வைத்திக்கு வேலை செய்வது என்றால் வேப்பங்காய் சாப்பிடுவது போலத்தான். யாராவது ஏதாவது வேலையைச் செய்யச் சொன்னால் எதாவது நொண்டிச்சாக்கைக் கூறித் தட்டிக் கழித்து விடுவான். இவ்வளவுக்கும் அவன் பதினைந்தே வயதான வாலிபன்.

அவன் தாயார் தோட்டத்துப் பூச் செடிகளுக்குப் பாத்தி கட்டச் சொன்னால் பூமா தேவிக்குக் காயம் ஏற்படுமே என்பான். செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றச் சொன்னால் அவற்றிற்கு ஜலதோஷம் பிடிக்குமே என்பான். மரத்தில் ஏறி மாங்காய் பறி என்றால் அங்கு வாழும் பறவைகள் தன்னைக் கண்டு பயந்து பரந்தோடி விடுமே என்றும் அது பாவம் என்றும் அவன் பகர்வான். வீட்டுக் கதவுகளையும், ஜன்னல்களையும் ஒட்டடை அடித்துத் துடைக்கச் சொன்னால் அவன் தன் தாயாரிடம் ''நீ தான் அவற்றைச்சுத்தமாக வைத்திருக்கிறாயே. எனக்குத் துடைக்க எதுவுமே இல்லையே'' என்று கூறி விடுவான்.

விடுமுறை நாட்களில் பாடப் புத்தகங்களை எடுத்துப் படிக்கச் சொன்னால் அவன் தான் ஒரு முறை ஆசிரியர் கூறுவதைக் கேட்டாலே எல்லாம் நினைவில் இருக்கும் எனக் கூறி விடுவான். ஏன் எப்போதும் விளையாடிக் கொண்டே இருக்கிறாய் என்று கேட்டால் அப்படிச் செய்வது நல்ல தேகப்பயிற்சி என்று பதில் அளித்து விடுவான்.

இந்த நிலையைக் கண்ட அவனது பெற்றோர்கள் அவனிடம் எந்த வேலையைச் செய்யும்படிச் சொல்வதை விட்டுவிட்டார்கள். வைத்தி குறும்புக்காரனல்ல. ஆனால் வேலை செய்யத்தான் அவனது உடம்பு வளையவில்லை.

ஒரு நாள் வைத்தியின் மாமா சுந்தரம் கிராமத்திலிருந்து அவன் வீட்டிற்கு வந்தார். அவர் வைத்தியின் போக்கை கவனித்து விட்டுத்தன் சகோதரியிடம் ''வைத்தியை இப்படியே விட்டு விட்டால் அவன்

உதவாக்கரையாக ஆகி விடுவான். இவனைத் திருத்தி நல்ல வழிக்குக் கொண்டு வர வேண்டும்'' என்றார். வைத்தியின் தாயாரும் ''அவன் மக்கு அல்ல. புத்திசாலி. வேலை செய்யத் தான் சுணங்குகிறான்'' என்றாள்.

சுந்தரம் தான் அவனைத் திருத்துவ தாகக்கூறி வைத்தியை அழைத்து ''நம் வீட்டு மாமரத்தில் நிறையக் காய்கள் காய்த்துள்ளன. நீ பறித்துக் கொடுத் தால் அவற்றால் இருநூறு ரூபாய் கிடைக்கும். அதில் நூறு ரூபாய் உனக்கு, நூறு ரூபாய் எனக்கு'' என்றார்.

வைத்தியோ ''இதற்கு நான் மரத் தில் ஏறி மாங்காய்களைப் பறித்துப் போட, நீங்கள் அவற்றைக் கடையில் கொண்டு போய் கொடுத்து ஏன் சிரமப் பட்டு பணம் வாங்கி வர வேண்டும்? நம் வீட்டு வேலைக்காரனிடம் சொன் னால் இதைச் செய்து விட்டுப் போகி றான். அவனுக்குப்பத்து ரூபாய் கொடுத்தால் போதும்'' என்றான்.

சுந்தரமும் ''நீ ஏன் இதைச் செய்யக் கூடாது?'' எனக் கேட்கவே அவன் ''நான் ஒரு வேலையையும் செய்யாத தால் தானே இந்த வீட்டில் வேலைக் காரர்களை வைத்துக் கொண்டிருக்கி றார்கள். நாட்டில் வேலை வாய்ப்பை அதிகப்படுத்த நான் உதவியுள்ளது உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

சுந்தரமும் ''நீ வீட்டில் வேலை செய்தால் வேலைக்காரர்களுக்குக் கொடுக்கும் சம்பளம் மீதமாகுமே. அதை தான தர்மங்களில் செலவிட்டு



புண்ணியம் பெறலாமே'' என்றார். வைத்தியும் ''புண்ணியமாவது! புண்ணாக்காவது!! நாம் கொடுத்து பிறர் கை நீட்டி வாங்குவது சரியா? ஏற் பது இகழ்ச்சி என்பது அவர்களுக்குத் தெரியுமே'' என்றான். இதைக் கேட்ட சுந்தரம் ''இவன் எதற்கும் ஒரு பதி லைத்தயாராக வைத்திருக்கிறானே. இவனை எப்படி மடக்குவது?'' என்று யோசிக்கலானார்.

அவர் அன்று முழுவதும் கடைத் தெருவில் திரிந்து பார்த்து விட்டு வந்து வைத்தியிடம் ''அருணாசலத்தில் கடையில் இரண்டு கிலோ அரிசி வாங்கினால் கால் கிலோ அவில் இனாமாகக் கிடைக்கிறது. குப்புசாமி யின் துணிக் கடையில் இரண்டு புடவைகள் வாங்குவோருக்கு ஒரு புடவை இனாமாகக் கொடுக்கப்படு கிறது. ராமசாமியின் பொம்மைக்



கடையில் இரண்டு பொம்மைகள் வாங்கினால் ஒரு பொம்மை இனாமாகக் கொடுக்கிறார்கள். இந்த ஊர்க் கடையில் ஒரே இனாம் மயமாக இருக்கிறதே'' என்றார்.

வைத்தியும் ''கடைக்காரர்கள் தம் சரக்குகள் விலை போகாததால் இப்படி இனாம் கொடுக்கிறார்கள். இப்படி ஒரு பொருளில் விலையைக் குறைத்து வாங்குபவர்களைக் கவர்ந்து இழுத்து அவர்களிடம் வேறு பொருள்களை அதிக விலையில் தள்ளி விடுகிறார்கள். இது வியாபார தந்திரம். இதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

சுந்தரமும் ''சரி தான். ஆனால் நாம் இந்தக் கடைகளில் மலிவாகக் கிடைப்பனவற்றை மட்டும் வாங்கலாம். நாளைக்கு நீ என்னுடன் வா'' என்றார். வைத்தியும் அரைமனதுடன் சரி என்றான். ஆனால் மறுநாள் காலை மணி ஒன்பதாகியும் வைத்தி படுக்கையை விட்டு எழுந்து இருக்கவில்லை. அவனை சுந்தரம் உலுக்கி எழுப்ப முயன்றார். ஆனால் அவனோ தனக்கு ஒரே தலைவலியாக இருக்கிறது என்றும் உடம்பெல்லாம் வலிக்கிறது என்றும் கூறவே அவர் மட்டும் சாமான்களை வாங்கக் கடைத் தெருவிற்குச் சென்றார்.

சுந்தரம் வீட்டை விட்டுப் போனதும் வைத்தி படுக்கையிலிருந்து எழுந்து முகம் கழுவி சிற்றுண்டி சாப்பிட்டு விட்டுத் தெருவில் விளையாடப் போய் விட்டான். சாமான்களை வாங்கிக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருந்த சுந்தரம் தெருவில் வைத்தி விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டார். வைத்தியும் அவரைப் பார்த்து விட்டான். அதனால் எங்காவது மறைந்து ஒளிந்து கொள்ள அவன் பின்னால் நகர்ந்தான். அங்கே ஒரு பள்ளம் இருக்கவே அதில் அவன் விழவே அவனது முழங்காலில் பெருத்த காயம் ஏற்பட்டது.

சுந்தரம் ஓடிப்போய் கை கொடுத்து வைத்தியைத் தூக்கி நிறுத்தினார். அவனது முழங்காலில் பெரிய காயத்தோடு சற்றுத் தள்ளி காலில் இன்னொரு காயமும் இருப்பதை அவர் கண்டார். அவர் அவனிடம் ''நீ தலைவலி, உடம்பு வலி என்றெல்லாம் பொய் சொல்லி என்னை கடை வீதிக்கு அனுப்பிவிட்டு நீ இங்கே விளையாட வந்து விட்டாயா?''

என்று அவன் காதைப் பிடித்துத் திருகியவாறே கோபத்துடன் கேட்டார்.

வைத்தியும் ''இல்லை மாமா, பய பக்தியுடன் உங்களுக்கு மரியாதை காட்டவே ஒளிந்து கொள்ள முயன் றேன். அதனால் காயம் ஏற்பட்டு விட்டது'' என்று கூறித்தன் முழங் காலைக் காட்டினான். அவரும் ''அது சரி. இந்தப் பெரிய காயத்துடன் இன் னொரு சிறிய காயமும் ஏற்பட்டிருக் கிறதே. அது எப்படி?'' என்று கேட் டார்.

வைத்தியும் சிரித்துக் கொண்டே ''அதுவா? நீங்கள் கை கொடுத்துத் தூக்கிய போது அது ஏற்பட்டது. என் பெரிய காயத்திற்குக் கிடைத்த இனாம் அது. உங்களுக்குத் தான் தெரியுமே இந்த ஊரில் எது வாங்கினாலும் இன் னொரு பொருள் இனாமாகக் கிடைக் கும் என்று. அதன்படி என் பெரிய காயத்திற்கு இனாமாகச் சிறிய காயம் கிடைத்தது'' என்று சொன்னான்.

சுந்தரமும் ''சீ போக்கிரி! நன்றாக வாயடி அடிக்கிறாய்'' என்று கூறி அவனை வீட்டிற்கு அழைத்துச் சென் றார். அவனது காலின் காயம் ஆற ஒரு வாரம் பிடித்தது.

அதற்குப் பிறகு வைத்தியின் போக்கு முற்றிலும் மாறிவிட்டது. அவன் மாமாவிடமும் தாயாரிடமும் ''அன்று கடைத்தெருவுக்கு மாமா வுடன் போக இஷ்டப்படாமல் பொய்யாகத் தலைவலி, உடம்பு வலி என்றெல்லாம் கூறி அவரை ஏமாற்றி னேன். அதற்குத் தண்டனையாக பூமா தேவி எனக்கு ஒரு பெரிய காயத்தைக் கொடுத்து அதற்கு இனாமாக ஒரு சிறிய காயத்தையும் இனாமாகக் கொடுத்து விட்டாள். இனி மேல் நான் பொய்யும் சொல்ல மாட்டேன். வேலை செய்யச் சுணக்கமும் காட்ட மாட்டேன்'' என்றான்.

அதைக் கேட்ட அவனது மாமா சுந்தரமும் அவனது தாயாரும் மனமகிழ்ந்து போயினர்.



# நம் இந்தியா

## வினாக்கள்

**இந்தியக் குடியரசின் இரண்டாவது ஜனாதிபதியான டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் பிறந்த செப்டம்பர் 5 ம் தேதி ஆசிரியர் தினமாகக் கொண்டாடப்படுகிறது. இம்மாத வினாக்கள் கல்வி சம்பந்தப்பட்டவை.**

1. இந்தியாவில் பழங்காலத்தில் எந்த இடம் கல்வி கற்பிக்கு மையமமாக இருந்தது?
2. விஸ்வபாரதி பல்கலைக் கழகத்தை யார் எப்போது நிறுவினார்?
3. சென்னையில் புகழ் பெற்ற நடனப் பயிற்சிக் கூடம் எது? அதை யார் நிறுவினார்?
4. புதிய கல்விக் கொள்கைக்கு பார்லிமென்ட் எப்போது ஒப்புதல் அளித்தது?
5. இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் அட்வான்சுடு ஸ்டடீஸ் என்பது எங்கே உள்ளது?
6. பனாரஸ் ஹிந்து பல்கலைக் கழகத்தை யார் நிறுவினார்?
7. முன்னாள் குடியரசுத்தலைவர் டாக்டர் ஜாகிர் ஹுசைனுக்கு எந்தப் பல்கலைக் கழகத்துடன் தொடர்பு இருந்தது?
8. மகாத்மா காந்தி அறிவித்த புதிய கல்வித் திட்டத்தின் பெயர் என்ன?
9. நேருவின் முதல் அமைச்சரவையில் கல்வி அமைச்சராக இருந்தவர் யார்?
10. கல்கத்தா, பம்பாய், மதராஸ் பல்கலைக் கழகங்கள் ஒரே ஆண்டில் துவக்கப்பட்டன. அந்த ஆண்டு எது?
11. ஆங்கிலம் போதனா மொழியாக எப்போது புகுத்தப்பட்டது?
12. யுனெஸ்கோவின் இணை இயக்குனராக கல்வித்துறையின் பேரறிஞரான இந்தியர் ஒருவர் நியமிக்கப்பட்டார். யார் அவர்?
13. கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் வில் வித்தை கற்றுக் கொடுத்த குரு யார்?
14. கேரளாவில் அந்நாட்டு நாட்டியக்கலையைக் கற்பிக்கும் அமைப்பின் பெயர் என்ன?
15. ஒரு பழங்காலப் பல்கலைக் கழகத்தில் ஒரு மருத்துவக்கல்லூரி இருந்தது. அது எது?

(விடைகள் அடுத்த மாதம்)

## ஆகஸ்ட் மாத வினாக்களின் விடைகள்

1. மூன்றாவது நாட்டுக் குதிரைப்படை.
2. ஏ. ஓ. ஹ்யூம் என்ற ஆங்கிலேயர்.
3. டபிள்யு. சி. பானர்ஜீ!: 1885.
4. லாலா ஹர்தயாள்.
5. கோரக்பூர் மாவட்டத்தில் பிப்ரவரி 5, 1922
6. ஏப்ரல் 13, 1919.
7. லோகமான்ய பாலகங்காதர திலகர்.
8. 1915.
9. ஜதின் முகர்ஜீ.
10. சர் தேஜ் பகாதுர் சப்ரூ, எம். ஆர். ஜெயகர்.
11. பகத்சிங்.
12. சிங்கப்பூரில் 1943 ல்.



# கிருஷ்ணபூபதி

முன் காலத்தில் மந்தாகினி என்ற நதிக்கரையில் மலயதீபம் என்ற நாடு இருந்தது. அதனை கோபாலபூபதி என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகன் கிருஷ்ணபூபதி. அவனுக்குப் பதினைந்து வயதாகும் போது அவனது தந்தை கோபாலபூபதி இறந்து விட்டான். அரசாளுவதற்கும் சற்றும் தகுதி பெறாத கிருஷ்ண பூபதியை எப்படி நாட்டின் மன்ன னாக்குவது என்று அவனது தாயார் சுநந்தாதேவி யோசிக்கலானாள்.

அப்போது அவளது அண்ணனும் குசத்தீபத்தின் மன்னனுமான சந்தன வர்மன் அவளது உதவிக்கு வந்தான். அவனது நாடு மலயதீபத்திலிருந்து இரண்டு நாடுகள் தள்ளி இருந்தது. தன் தங்கைக்கு உதவ வேண்டும் என்பதற் காகச் சந்தனவர்மன் தனக்கு நம்பக னாயும் உறவினனுமான மால்ய வந் தனிடம் குசத்தீபத்தின் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விரை விலே தான் திரும்பி வந்து விடுவ தாகக் கூறித் தன் குடும்பத்தோடு மலய தீபத்திற்கு வந்து விட்டான்.

சந்தனவர்மன் கிருஷ்ணபூபதிக்கு எல்லாப் போர்கலைகளையும் கற்றுக் கொடுத்ததோடு ஆட்சி முறைகளை யும் அவன் மனதில் பதிய வைத்தான். அவனுக்குப்பட்டாபிஷேகம் செய்து அவனுக்கு அனுபவம் நன்கு வந்தது எனக் கண்டபின் அவன் தன் குடும்பத் துடன் குசத்தீபத்திற்குத் திரும்பிச் சென்றான். கிருஷ்ணபூபதி மிகவும்

-சுதா கிருஷ்ணசாமி-



கண்ட அவனது மனைவி தன் மகளு டன் அப்போதே ரகசியமாக வெளி யேறி மலயத்தீபத்தை அடைந்தாள். தன் அண்ணனை மால்யவந்தன் வஞ்சக மாகக் கொன்று விட்டான் என்பதைக் கேட்டு சுநந்தாதேவி கடுங் கோபம் கொண்டாள். அந்த வஞ்சகன் பிடியில் அகப் படாமல் தப்பி வந்த தன் அண்ணனின் மனைவியையும் மகளை யும் தன்னுடனேயே அவள் பாது காப்பாக வைத்துக் கொண்டாள்.

அவர்கள் வந்த அன்றிரவே சுநந்தா தேவி கிருஷ்ணபூபதியை அழைத்து ''மகனே! நான் என் இரு விருப்பங் களை இப்போது உன்னிடம் கூறப் போகிறேன். அவற்றை நீ நிறை வேற்றி வைப்பாயா?'' என்று கேட்டாள்.

கிருஷ்ணபூபதியும் ''என்னம்மா இப்படிக் கேட்கிறாய்? உன் விருப் பத்தை நிறைவேற்றாமல் நான் இருந்து விடுவேனா? கண்டிப்பாக நிறை வேற்றுவேன். அவை என்ன என்று சட்டெனச் சொல்'' என்றான்.

சுநந்தாதேவியும் ''என் முதலாவது விருப்பம் உன் மாமாவை வஞ்சகமாக கொன்ற துரோகி மால்யவந்தனை நீ கொன்று பழி தீர்க்க வேண்டும். என் இரண்டாவது விருப்பம் என் அண்ண னும் நானும் ஏற்கனவே பேசி முடிவு செய்து கொண்டபடி நீ உன் மாமன் மகள் ஜோதிரத்னாவை மணந்து கொள்ள வேண்டும். அவள் பட்டத்து ராணியாக உன்னுடன் சிம்மாசனத் தில் அமர வேண்டும். இவைதான் என் விருப்பங்கள். இவற்றை நிறை

புத்தி கூர்மையானவன். எனவே ஆட்சி முறைகளோடு இலக்கியத்தி லும் நல்ல தேர்ச்சி பெற்றான்.

ஐந்து வருடங்களுக்குப் பின் சந்தன வர்மன் தன் நாட்டிற்குச் சென்றான். அதற்குள் நாட்டின் நிலை மோசமாகி விட்டது. அவ்வளவு நாட் களாக ஆட்சி புரிந்து வந்த மால்ய வந்தன் என்றென்றும் நானே மன்ன னாக இருக்க வேண்டு மென எண்ணி விட்டான். அதனால் அவன் சந்தனவர் மனை வரவேற்பது போல தலை நகருக்கு வந்ததும் அவன் கழுத்தில் விஷமலர் மாலையைப் போட்டு ஊர் வலமாக அழைத்துச் சென்றான்.

ஊர்வலம் அரண்மனையை அடைந்த சற்று நேரத்திற்குப் பின் சந்தனவர்மன் மலர்களின் விஷம் தாக்கி இறந்து போனான். அதைக்

வேற்றுவாயா?'' என்று கேட்டாள்.

கிருஷ்ணபூபதியும் ''என்னம்மா இப்படிக் கேட்கிறாய்! என்னை ஆளாக்கி ஆட்சிபுரியக் கற்றுத் தந்த என் மாமாவுக்கு இவற்றைச் செய்ய வேண்டியது என் கடமை. நானும் அது பற்றி இன்று முழுவதும் யோசித்துக் கொண்டு தான் இருந் தேன். மால்ய வந்தன் ஆளும் குசத் தீபம் மட்டுமல்ல, நம் நாட்டிற்கும் அந்நாட்டிற்கும் இடையே உள்ள மற்ற இரு நாடுகளான சாமரதீபத்தை யும் கலஹர நாட்டையும் வென்று நம் நாட்டோடு சேர்த்து விடுகிறேன். இனி மற்ற உன் விருப்பம் தானே. அவள் என் மாமன் மகள். எனக்கு முறைப் பெண். உன் விருப்பமும் என் மாமா வின் விருப்பமும் நான் அவளை மணந்து பட்டத்து ராணியாக்க வேண் டும் என்பது கேட்டு இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறேன். முதலில் படையெடுப்புக்கான ஏற்பாடு களைச் செய்து விட்டு ஒரு நல்ல நாளில் படை எடுத்துச் செல்லப் போகிறேன்.'' என்றான்.

சுநந்தாதேவியும் ''அப்படியே செய்து முதலில் அந்தத் துரோகி மால்யவந்தனை நீ கொன்று பழி தீர்த்துக் கொள்ள வேண்டும். மற்ற இரு நாடு களையும் வென்று நம் நாட்டோடு சேர்க்கப் போவதாகச் சொன்னாய். போரில் நீ மகத்தான வெற்றி பெற்றுத் திரும்பி வரு வாயாக'' என்று வாழ்த்தினாள்.

ஒரு நல்ல நாளில் கிருஷ்ணபூபதி



பயிற்சி பெற்ற படையுடன் கிளம்பி னான். சாமர நாட்டில் சரியான ஆட்சி இல்லாததால் அதை வென்றது எளி தாகி விட்டது. கலஹர மன்னனோ குடி, மாது எனக் கேளிக்கைகளில் மூழ்கி படை பலத்தை அதிகரிக்காத தால் கிருஷ்ண பூபதிக்கு அந்நாட்டை வெல்வதும் எளிதாயிற்று. இந்த வெற்றிகளுக்குப் பின் கிருஷ்ணபூபதி யின் படை குசத்தீபத்தை நோக்கிச் சென்றது.

வழியில் அடர்ந்த காடு வந்ததால் கிருஷ்ணபூபதி ஓரிடத்தில் தங்கி ஓய் வெடுத்துக் கொண்டு செல்லத் தீர் மானித்தான். அதனால் ஓரிடத்தில் கூடாரங்கள் போடப்பட்டன. கிருஷ்ணபூபதி தன் கூடாரத்தில் ஓய் வெடுத்துக் கொண்டிருந்தான்.



கொஞ்ச நேரமாகி யது. அவனது கூடாரத்திற்கு வெளியே ஏதோ சத்தம் கேட்டது. கிருஷ்ணபூபதி சட்டென எழுந்து உட்கார்ந்து வெளியே காவல் காக்கும் வீரனிடம் அது என்ன சத்தம் என்று கேட்டான்.

அந்தக் காவல் வீரனும் கூடாரத்திற்குள் சென்று யாரோ மீசை முளைக்காத சிறுவன் ஒருவன் நம் படையில் சேர வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்கிறான். அவன் தங்களைக் காண வேண்டுமாம். ஆனால் அவன் எதிரியின் ஒற்றனோ என்று சந்தேகித்து நம் வீரர்கள் அவனைத் தடுத்து நிறுத்திக் கொண்டிருக்கிறார்கள்'' என்றான்.

கிருஷ்ணபூபதியும் எழுந்து கூடாரத்திற்கு வெளியே வந்து பார்த்தான். வீரர்களுக்கு மத்தியில் நின்ற வாலிபன் இளம் வயதினனே. தீவட்டி வெளிச்சத்தில் ஒளி விடும் கண்களும் அவனது எலுமிச்சம் பழ நிறமும் நன்கு தெரிந்தது. வீரர்கள் செய்த கெடுபிடியில் அவன் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்த கிருஷ்ணபூபதி அவனிடம் ஏதோ ஒரு கவர்ச்சி இருப்பதை உணர்ந்தான். அவன் வீரர்களிடம் ''அவனை என் கூடாரத்திற்குள் அனுப்புங்கள்'' என்று கூறி விட்டுத் தானும் உள்ளே சென்றான்.

கூடாரத்துள் வந்த அந்த வாலிபன் கிருஷ்ணபூபதியைப் பணிவுடன் வணங்கினான். பிறகு அவன் ''இவ்வளவு விரைவில் தங்களைக் காண முடியும் என்று நான் எண்ணவில்லை!'' எனக் கூறினான்.

அவனது குரலிலுள்ள இனிமை கண்டு மன்னன் வியந்தவனாய் ''யாரப்பா நீ? நீ எந்த நாட்டைச் சேர்ந்தவன்? எங்கள் படையில் சேர வேண்டுமென்று ஏன் துடிக்கிறாய்?'' என்று கேட்டான்.

அந்த வாலிபனும் ''என் பெயர் கலா பூர்ணன். நான் ஒரு அநாதை. எனக்கு என் நாடு என்று எதுவும் கிடையாது. நீங்கள் நடத்தும் இந்த தர்ம யுத்தத்தில் நானும் சேர்ந்து கொள்ளத்தான் ஆசைப் படுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட கிருஷ்ணபூபதி ''நீ சொல்வதை ஏற்று உன்னை எம் படையில் சேர்த்துக் கொண்டு விட முடியுமா? உன் திறன் என்ன என்று



தெரிந்து கொண்ட பிறகே அது பற்றி யோசிக்க முடியும்'' என்றான்.

அந்த வாலிபனும் ''ஆகா! என் திறனைக் காட்டுகிறேன்'' என்றான். அவன் ஒரு வீரனை அழைத்து வரச் சொல்லி அவனை கூடாரத்தின் துணியின் பக்கம் நிறுத்தினான். பிறகு சற்றுத் தொலைவில் அவன் நின்று கொண்டு தன்னிடமிருந்த கூரான ஆணிகளை எடுத்து அந்த வீரனின் தலையைச் சுற்றி லாட வடிவில் துணியில் பதியும் படி வீசினான். அந்த வீரனும் காயப் படாமல் முடிவில் வெளியே வந்தான்.

கிருஷ்ணபூபதி ''பேஷ், பேஷ்'' எனக் கூறி கை தட்டிப் பாராட்டி னான். அவனைத் தன்னருகே வந்து தன் பக்கத்தில் உட்காரும்படிக் கூறினான்.

அந்த வாலிபனோ ''வேண்டாம் அரசே! நான் இங்கேயே தரையில் உங்கள் கால்களுக்குப் பக்கத்தில் உட் கார்ந்து கொள்கிறேன்'' என்றான்.

கிருஷ்ணபூபதியும் ''அப்படியா னால் எம் படையில் சேர உறுதியுடன் இருக்கிறாயா?'' என்று கேட்கவே அவனும் 'ஆம்' என்று பதிலளித் தான். உடனே அவன் தன் படைத் தளபதியை அழைத்து ''இந்த வாலிபனுக்கு நம் வீரர்களோடு தங்க எல்லா வசதிகளையும் செய்து கொடு. என் கூடாரக் காவல் வீரர்களில் இவனும் ஒருவனாக இருக்கட்டும்'' என்றான்.

குசத்தீபப்போர் சில நாட்களில் முடிந்தது. துரோகி மால்யவந்தனை கிருஷ்ணபூபதியே போரில் கொன் றான். குசத்தீபம் அவன் வசப்பட்டது. அப்போரில் நன்கு போர் புரிந்த வீரர் களை மன்னன் பாராட்டி கௌரவித் தான். அந்த வீரர்களில் கலா பூர்ணனும் ஒருவன்.

வெற்றி விழா ஒரு வார காலத்திற்கு நடந்தது. கடைசி நாளன்று இரவு மன்னன் கலாபூர்ணனை அழைத்து ''உன் நோக்கம் நிறைவேறிவிட்டதே. இனி உன்னைப் பற்றிய முழு விவரங் களையும் கூறுகிறாயா'' என்று



கேட்டான்.

கலாபூர்ணன் பதிலளிக்காமல் தயங்கியவாறே ''எனது ஒரு சிறிய கோரிக்கை உள்ளது. அதைச் சொல் லட்டுமா?'' என்று கேட்டான்.

கிருஷ்ணபூபதியும் ''போரில் நீ காட்டிய திறமையைக் கண்டு வியந்து போனேன். உண்மையிலே நீ நன்கு போர் புரிந்தாய். அதற்காகத் தான் சிறந்த வீரர்களில் ஒருவனாக உன்னைத் தேர்ந் தெடுத்துப் பரிசும் அளித்தேன். யாராக இருந்தாலும் தகுதிக்குத் தக்க மதிப்பு கொடுக்கத் தானே வேண்டும். உன்னைப் பற்றி எதுவுமே தெரியாது போனாலும் உன்னை நான் பாராட்டினேன். இப்போது ஏதோ கோரிக்கை என்கிறாய் அதைச் சொல்'' என்றான்.

அந்த வாலிபனும் ''எனக்கு என்று ஒரு நாடும் இல்லை. அதனால் நான் உங்களுடன் மலயத்தீபத்திற்கு வந்து விடலாமென நினைக்கிறேன்'' என்றான்.

கிருஷ்ணபூபதியும் ''சரி. நீ வர லாம். ஆமாம் நீ பூங்காவில் மண்டபத் தில் அமர்ந்து ஏதோ ஒரு பாடலைப் பாடிக் கொண்டிருந்தாயே. அதை இப் போது பாடிக்காட்டு'' என்றான்.

அது கேட்டு அந்த வாலிபன் திகைத்து ''நீங்கள் அதைக் கேட்டீர்களா?'' என்று கேட்டான்.

கிருஷ்ணபூபதியும் ''அது வெண்ணிலாவைப் பற்றிய பாடல் தானே! எவ்வளவு அழகாக அமைக்கப் பட்டது அது! வெண்ணிலாவே! உன் குளிர்ச்சியான கிரணங்களுக்குத் தான் எவ்வளவு உயர்ந்த புகழ் கிடைத்து உள்ளது. கிருஷ்ணபக்ஷத்தின் போது எங்கோ பதுங்கிக்கிடந்த இவை இப் போது எப்படி ஒளிவிட்டவாறு வெளி வந்துள்ளன! உலகில் இருள் இருப் பது போலக் கெடுதல்கள் உள்ளன. ஒளி இருப்பது போல நல்லவை உள்ளன. இருளால் தானே ஒளியின் பெருமை வெளிப்படுகிறது! அது போலக் கெட்டவை இருப்ப தால் தானே நல்லவை சிறப்பைப் பெறுகின்றன! எனவே பௌர்ணமி நிலவே! உன் பெருமையை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை என்று தானே அப்பாடலின் பொருள்! அதன் இலக்கியநயம் நேர்த்தியாக இருந்தது. அப்பாடலை நீ உன் இனிய குரலில்

பாடியது கேட்கக் கேட்க தெவிட்டாத இன்பமாக இருந்தது'' என்றான்.

அதைக் கேட்ட வாலிபன் வெட்கித் தலை குனிந்தான்.

கிருஷ்ணபூபதி எழுந்து நின்று ''கலாபூர்ணா! உன் அழகிய உருவமும் இனிமையான குரலும் எனக்கு ஆரம்ப முதலே சந்தேகத்தை உண் டாக்கியுள்ளது. இப்போதாவது உன்னைப் பற்றிய முழு விவரங் களைக் கூறுகிறாயா? உண்மையில் நீ யார்? உன் தோற்றத்திற்கும் உன் செயலுக்கும் இந்தப் போர் வீரனின் வேடம் சற்றும் பொருத்தமாக இல்லையே. ஏன் இப்படி உருமாறி இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

கலாபூர்ணன் உடனடியாக எதுவும் கூறவில்லை. அவன் தலையைச் சுற்றி கட்டியிருந்த நீளமான துணியை மெதுவாக அகற்றினான். அப்போது அவனது தலையில் அடர்ந்து கறுத்த நீண்ட கேசம் வெளிப்பட்டது.

அதைக் கண்டு கிருஷ்ணபூபதி ''ஆ! நீ ஒரு இளம் பெண்ணா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

ஆண் வேடத்திலிருந்து அவள் அவனது கால்களில் விழுந்து வணங்கி ''ஆமாம். சுயநலம் காரணமாக இதற்கு முன் தங்களிடம் பொய் சொல்லி விட்டேன். நான் கலா கௌமுதி'' என்றாள்.

உடனே கிருஷ்ண பூபதி அவனது இரு கைகளையும் பற்றி அவளைத் தூக்கி நிறுத்தி ''நீ ஒரு பெண் என்றும் அதுவும் க்ஷத்திரிய குடும்பத்தில் பிறந் தவள் என்றும் அன்றே உன்னைப் பார்த்தும் தெரிந்து கொண்டு விட் டேன். சரி நீ உட்கார்ந்து கொண்டு கலா பூர்ணன் என்ற பெயரை ஏன் வைத்துக் கொண்டாய் என்பதை விவரமாகக் கூறு'' என்றான்.

அவளும் அவன் கூறியபடி உட் கார்ந்து கொண்டு மன்னன் தனக்குக் காட்டும் மரியாதையைக் கண்டு மகிழ்ந்து போனாள். அவளது கண் களில் கண்ணீர்த்ததும்பியது. அதைத் துடைத்துக் கொண்டு அவள் தன்னைப் பற்றிய விவரங்களைக் கூறலானாள்.

(அடுத்த இதழில் முடியும்)





# பொம்மை மனிதர்கள்

ஒரு முறை தீரசிம்மன் என்ற மன்னன் தனக்கு வேண்டியவர்களையே கிராம அதிகாரிகளாக நியமித்தான். அந்த கிராம அதிகாரிகள் தமக்கு மன்னனின் பூரண ஆதரவு இருந்ததால் தம் மனம் போனபடி அடாத செயல்களைச் செய்து வந்தார்கள். அவர்களது அட்டூழியங்கள் சகிக்க முடியாத அளவுக்குப் போய் விட்டன. அவர்களைப் பற்றி மன்னனிடம் புகார் செய்ய யாருக்கும் துணிவு வரவில்லை. மக்கள் மனம் புழுங்கி அந்த அதிகாரிகளின் அடாத செயல்களைச் சகித்துப் கொண்டு இருந்தார்கள்.

ஆனால் ஆதித்தன் என்ற இளைஞன் மன்னனைக் கண்டு கிராம அதிகாரிகள் செய்யும் அட்டூழியங்கள் பற்றித் துணிவுடன் புகார் கூறினான். அதைக் கேட்ட மன்னன் அதை நம்ப மறுக்கவே, ஆதித்தனும் ''நான் வணங்கும் பழனியாண்டவர் மீது ஆணையாகக் கூறுகிறேன். நான் கூறியதெல்லாம் முற்றிலும் உண்மையே'' என்றான்.

மன்னனோ ''நீ கூறும் பழனியாண்டவர் கற்சிலை தானே! பாமர மக்களுக்குத் தான் அது தெய்வம் என்ற நம்பிக்கை இருக்கிறது. என் போன்றவர்கள் நல்லது எது கெட்டது என்று தம் பகுத்தறிவைக் கொண்டே பார்க்கிறார்கள். என் அதிகாரிகள் மிகவும் நல்லவர்கள் என்பது எனக்கு நன்கு தெரியும். எனவே, நீ கூறுவதெல்லாம் பொய், இன்னொரு முறை இப்படி நீ புகார் செய்தால் உன்னைச் சிறையில் தள்ளுவேன்'' என எச்சரித்தான்.

சிவனார் செல்வன்

ஆதித்தனோ சற்றும் பயப்படாமல் ''நான் இப்போதும் அதே புகாரைத் தான் கூறுகிறேன். என்னை வேண்டு மானால் சிறையில் தள்ளுங்கள். ஆனால் அந்த அதிகாரிகளின் மீது விசாரணை நடத்தித் தண்டியுங்கள்'' என்றான். அதைக் கேட்ட மன்னன் ஆச்சரியப்பட்டு யோசிக்கலானான். பிறகு அவன் ஆதித்தனை எதுவும் செய்யாமல் அனுப்பிவிட்டு மந்திரி களைக் கூட்டி ஆதித்தன் குறிப்பிட்ட அதிகாரிகள் அடாவடியில் இறங்கி மக்களைத் துன்புறுத்துகிறார்களா என்று கேட்டான். அவர்களும் அந்த அதிகாரிகளைப் பற்றி விவரம் சேக ரித்து வர மகாதேவர் என்ற அறிஞரை அனுப்பலாம் என யோசனை கூறினார்கள்.

மகாதேவர் நாடெங்கும் திரிந்து மக்களுக்கு அறிவுரைகள் கூறி நல் வழியில் நடக்குமாறு கூறி வந்தார். மன்னன் அவரை அழைத்து வரச் சொல்லி அவர் வந்ததும் ''நான் சில கிராம அதிகாரிகளை நியமித்தேன். அவர்கள் எனக்கு வேண்டியவர்கள். அதனால் அவர்கள் அக்கிரமங்கள் செய்கிறார்கள் என்று பலர் வீணாக அவர்கள் மீது குற்றம் சாட்டுகிறார்கள். உண்மை என்ன என்று நீங்கள் கண்டு எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று வேண்டி யார் யார் அந்த அதிகாரிகள் எனவும் கூறினான்.

மகாதேவரும் ''நான் கூட அந்த கிராம அதிகாரிகளின் ஊர்களுக்குச் சென்றிருக்கிறேன். அவர்கள் அக்கிர மங்களைச் செய்தே வருகிறார்கள். அவர்களைப் பற்றி யாராவது புகழ்ந் தால் அதை நம்பக் கூடாது. அவர்



களைப் பற்றி புகார் கூறினால் அது உண்மையாக இருக்கலாம் என எண்ணி முழு விசாரணை நடத்த வேண்டும். நானே அவர்களது உயர் அதிகாரிகளிடம் அவர்களை மாற்றி விடும்படிக் கூறினேன். அவர்கள் அதற்கு இசையவில்லை. எனவே நீங்கள் கடும் நடவடிக்கை எடுத்தாலே பிரச்சினை தீரும்'' என்றார்.

மன்னன் அதனை ஏற்காமல் ''பெரியவரே! கடவுள் எல்லா மனிதர் களுள்ளே வாசம் செய்கிறார் என்பதை நான் நம்புகிறேன். அதனால் மனி தர்கள் அக்கிரமங்கள் புரிகிறார்கள் என்பதை நம்ப மாட்டேன். எனது இந்த எண்ணம் சரியல்ல என்றால் தக்க காரணங்கள் கூறி விளக்கு வீர்களா?'' என்று பணிவுடன் கேட்டான்.

அவரும் ''மன்னா! இது உனக்கு நன்கு புரிய ஒரு கதையைச் சொல்



கிறேன் கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்லலானார்.

பிரம்மா இவ்வுலகின் எல்லா ஜீவ ராசிகளையும் படைத்தார். அவற்றில் மனிதனுக்கு மட்டும் அறிவு என்பதை வைத்து அவனுக்கு யோசித்துச் செயல் படும் திறனையும் கொடுத்தார். மற்ற ஜீவராசிகள் இதனால் மனிதனைத் துன்புறுத்தவே மனிதன் அவற்றை வேட்டையாடலானான். பொறுமை, சாந்தம்' போன்ற குணங்கள் மனி தனிடமிருந்து மறைவதை கண்டு அந்த இயல்புகளைக் கொண்ட ஜீவ ராசிகளிலிருந்து மனிதர்கள் பிறக்கும் படிச் செய்தார். அதனால் சில மனி தர்கள் சாந்த குணம் கொண்டும், சிலர் அமைதியை விரும்புவர்களாயும், சிலர் கோபம், கொடூரம் என்ற குணங்களைக் கொண்டவர்களாயும் பிறந்தனர்.

இதைக் கண்ட மற்ற ஜீவராசிகள் எல்லாம் ஒன்றாகச் சென்று பிரம்மாவைக் கண்டு ''தங்களது படைப் பில் ஒவ்வொரு ஜீவராசியிலும் ஏதோ ஒரு சிறப்பான குணம் உள்ளது. மனி தர்கள் இப்போது எல்லா ஜீவராசி களிலிருந்தும் பிறப்பதால் அந்த ஜீவ ராசிகளுக்கு மனிதனின் மேன்மை புரிந்தது. இதனால் மனிதன் உயர்ந் தவன் என்றாகி விட்டது. மனிதன் எல்லா ஜீவராசிகளிலிருந்தும் பிறப் பது போல மற்ற ஜீவராசிகளும் மனிதனிலிருந்து பிறக்க வேண்டும்'' என்று வேண்டின. இதைக் கேட்ட பிரம்மா திடுக்கிட்டார். அதன் பின் மனிதர்களை மற்ற ஜீவராசிகளி லிருந்து பிறக்கச் செய்யாமல் அவற்றின் சில குணங்கள் மட்டும் மனிதர்களிடம் இருக்கும்படிச் செய்தார்.

மகாதேவர் இந்தக் கதையை மன்னனுக்குக் கூறி ''பறவை அம்சம் கொண்ட மனிதர்கள் பறவைகளை நேசிக்கிறார்கள். சாதுக்கள் சாந்த குணத்தை அடைகிறார்கள். கொடி யவர்கள் குரூர மிருகங்களின் இயல்பு களையும் நச்சுப் பாம்புகளின் விஷத் தன்மையையும் பெறுகிறார்கள். மனி தர்களின் போக்குகளுக்கு இந்த ஜீவ ராசிகளின் இயல்புகளே காரணம். கொடிய மிருகங்களை மனிதன் வேட்டை ஆடுவதைப் போல நாட்டை ஆளும் மன்னன் கொடியவர் களைப் பிடித்து தண்டிக்க வேண்டும். இது அவனது கடமை'' என்றார்.

இதைக் கேட்ட மன்னன் ''பெரிய வரே! மானிடப்பிறப்பு உயர்ந்தது தானே. மனிதன் சில மிருகங்களின் இயல்புகளைக் கொண்டிருந்தாலும் அவன் இறைவனின் படைப்பில் மற்ற ஜீவராசிகளை விட உயர்ந்த

வனே. இந்த கொடிய மனிதர்களின் குணங்களை மாற்ற வேண்டியது உங்களைப் போன்ற சாதுக்களின் கடமை தானே. நீங்கள் அறிவுரைகளைக் கூறி அத்தகைய மனிதர்களை மாற்றி நல்லவர்களாக்கலாமே'' என்றான்.

அது கேட்டு மகாதேவர் புன்னகை புரிந்து ''பிறக்கும் போதே நல்ல இயல்புகளுடன் பிறக்கும் மானிடன் உத்தமன். ஆனால் மற்ற ஜீவராசிகளின் இயல்புகளுடன் பிறக்கும் மானிடனிடம் அந்தந்த இயல்புகளே இருக்கும். சிலைகள் கல்லாலான பொம்மைகளே. ஆனால் அவற்றிற்கு சிறப்பு மனிதனின் இயல்பால் ஏற்படுகிறது. மனிதர்களும் பிரம்மாவால் படைக்கப்பட்ட பொம்மைகளே. அவற்றின் சிறப்பு மனிதனின் இயல்பால் ஏற்படுவது. ஆதித்தன் குறிப்பிட்ட கிராம அதிகாரிகளிடம் கொடிய மிருகங்களின் குணங்கள் குடி கொண்டுள்ளன. மிருகங்களை வேட்டையாடுவது போல மனித மிருகங்களாகிய இந்த அதிகாரிகளை தண்டித்து ஒழிப்பது உன் கடமை. அதை நீ முதலில் செய்'' என்றார்.

அதைக் கேட்ட மன்னன் பணிவுடன் மகாதேவரின் கால்களில் விழுந்து வணங்கி ''என்னைப் புகழ்ந்தவர்களை எனக்கு வேண்டியவர்கள் என்று எண்ணி நான் அவர்களை கிராம அதிகாரிகளாக நியமித்தது என் தவறே. கொடியவர்களைத் தண்டிக்க வேண்டியது என் கடமை. நீங்களும் ஆதித்தனும் கூறியபடி அவர்கள் மீது விசாரணை நடத்தி தக்க தண்டனைகளை அளிக்கிறேன்'' என்றான்.

இதன் பின் அந்த கிராம அதிகாரிகளைப் பற்றி மன்னன் விசாரணை நடத்தி அவர்களில் நல்லவர்களை மட்டும் பதவிகளில் இருக்க வைத்துக் கொண்டு கொடிய அதிகாரிகளைத் தண்டித்து சிறையில் தள்ளினான்.



# வீரதீர பராக்கிரமன்












மன்னன் திகைத்துப் போனான்.













கருடன் தன் ரகசியத்தை அறிந்த ஒரே ஒருவனான வீரபாகுவைச் சந்தித்தான்.
நதிக்கரையிலுள்ள வரண்ட நிலத்தைச் சாகுபடிக் கேற்ற நில மாக மாற்ற நமக்கு பல இளைஞர்கள் தேவை,
அதொன்றும் பெரிய பிரச்சனை இல்லை. ஏராளமான இளைஞர்கள் தயாராக இருக்கிறார்கள்''


சில வாரங்கள் கழிந்தன. நாட்டில் ஆங்காங்கே கொண் டாட்டங்கள் நடைபெற்ற வண்ணம் இருந்தன.


அவ்வளவு மகிழ்ச்சி யடைய என்ன இருக்கிறது? ஆதித்தன் மன்னனின் கட்ட ளையை தானே நிறை வேற்று கிறான். அவ்வளவு தானே.


ரவீந்திரன் காரணமில்லாமல் கவலைப்பட்டான். இப்போது என்ன நடந்து விட்டது? போகப்போக மாறுதல்கள் ஏற்படும் சந்திரபுரியின் தலைமையில் மாறுதல் ஏற்படப் போகிறது.


ஏழைகளுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் சாகுபடி நிலங்களாயின. ஆதித்தனுடைய மேற்பார்வையில் எல்லா மாறுதல்களும் செவ்வனே செய்யப்பட்டன.
நல்ல வேளை! இன்னும் தொலைவில் இல்லை.


நாட்டில் மெதுவாக அமைதி திரும்பலாயிற்று. எல்லா இடங்களிலும் முன்னேற்றம் காணப்பட்டது.
ஆ தி த் தா ! உன்னை நான்
முதலமைச்சராக நியமிக்கிறேன்
அரசே! ஒரு விண்ணப்ப


நமக்கு அனுபவமிக்க ஒருவர் தேவை தானா?
ஆதித்தன் முதலமைச்சரா? அதற்கு அவனுக்கு என்ன தகுதி இருக்கிறது?''
இது என் உறுதியான முடிவு. உடனே ஆதித்தன் தான் முதலமைச்சர் என்று பிரகடனப் படுத்துங்கள்
தொடரும்




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-
போட்டி முடிவு நவம்பர் 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

ஜுலை 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர் :
எம். ஹர்ஷிணி
c/o. எஸ் பிரேம் ஆனந்த்
நெ. 7, லிங்கம் நகர்.
மருதாண்டாக்குறிச்சி 620102,
திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





தொட்டியில் பூத்திருக்கும் மலர்
கம்பிக்குள் காத்திருக்கும் தளிர்

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/-
Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

